

# ஸப்தகிரி

ஜூலை, 1988

விலை ரூ. 1/-








திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

# THE VICE-PRESIDENT VISITS TIRUMALA



The Vice President Dr. Shankar Dayal Sharma is seen planting a croton at Tirumala.





Sri Shankar Dayal Sharma visits and worships 'Narayanagiri Padam'.



The Vice President is seen with the T.T.D. Officials and Minister for Endowments, Sri Simhadri Satyanarayana.



குருரேவ பரம்பிரம்ம குருரேவ பரம் தனம்
குருரேவ பர: காமோ குருரேவ பராயணம்
குருரேவ பராவித்யா குருரேவ பராகதி:
யஸ்மாத்தத் உபதேஷ்டாஅஸௌதஸ்மாத் குருதரோ குரு:

*(காச்யப சம்ஹிதை.)*

குரு எனும் ஆசிரியரே வணங்குதற்குரிய பரம்பொருளாவார், குருவே கிடைத்தற்கரிய பெருஞ் செல்வமாவார். குருவே அருளுதற்குரிய பெரும் வரமாவார். குருவே பெறுதற்கு அரிய அரும் பொருளாவார். குருவே கற்பதற்குரிய பெரும் கல்வியாவார். குருவே புகுதற்குரிய இறுதிப்பு கலிடமாவார். அவரே நமக்குச் சிறந்த வழிகாட்டியாவதால் அவர் ஒருவரே நாம் போற்றி வணங்குதற்குரியவராவார்.

ஜுலை 1988

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ 1 மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 2

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முனனட்டையில் : திருமலையில் பவித்ரோதசவம்

பின்னட்டையில : திருமலை ஆனிவார ஆஸ்தானத்தின் போது உத்சவர் எழுந்தருளும் 'புஷ்பபல்லக்கு'

சிறப்பாசிரியர் :
திரு. சிவச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியா
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

ஒவ்வொரு ஆண்டும் 'ஆசிரியர் தினம்' என்று கொண்டாடுகிறோம். அதற்கு முன்பேயே 'குரு பூர்ணிமை' என்றும் 'வியாஸ பூர்ணிமை' என்றும் குருவின் பெருமையை எண்ணிப் பார்த்திடும் வகையில் ஆசிரியரின் பெருமை பல்லாண்டுகளாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இது சம்பந்தமாக நாமும் 'உங்களுடன்' பகுதியில் பலவாறு பல செய்திகளைக் கூறியுள்ளோம். பாதை சீராக அமைய வேண்டுமானால் அப்பாதை பலரும், பலமுறைப் பயன்படுத்தப்படு வதாக அமைய வேண்டும். நடக்க நடக்கத்தான் அப்பாதை, பலரும் எளிதாகக்கடக்கப் பயன்படும். ஆம், அவ்வகையில் தான் குருவின் பெருமை, அவர் சமுதாயத்தில் வகிக்கும் பங்கு இங்கு மறுபடியும் எண்ணிப் பாக்கப்படுகின்றது.

கல்வியின் தரம், மாணவர்களின் தரம், ஆசிரியர்களின் தரம் ஆகிய மூன்றும் சேர்ந்த போதுதான் ஆசிரியர் களின் பெருமை பேசப்படுகின்றது. இவை இன்று எந்த நிலையில் உள்ளது என்பது நாடறிந்த ரகசியமாகும். பட்டதாரி களை உற்பத்தியாக்கும் ஆலைகளாக கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும் விளங்கும் நிலை பரிதாபத்திற்குரியது. பணம் பண்ணும் வியாபாரத் தலங்களாக இன்றைய ஆரம்பப் பள்ளிகள் மாறிப் போனது நாடு செய்த பாவமோ! முன் வரிசை மாணவர்களைத்தவிர பல மாணவர்களின் முகம்கூட ஆசிரியர்களால் தெரிந்து கொள்ள முடியாத நிலை இன்றைய கல்வி நிலையங்களில் விளங்குகின்றது. விடுமுறைகள், வேலை நிறுத்தப் போராட்டங்களால் ஏற்படும் கால விரயங்கள் கழிய பத்து மாத கால இடைவெளியில், தாம் நடத்த வேண்டிய பாடங்களை அவசர அவசரமாக முடித்துத்தள்ள வேண்டிய ஆசிரியர்களின் நிலை பரிதாபத்திற்குரியது. இப்பரிதாபம் மேலும் கேலிக்குரியாவது போல், நடைமுறை வாழ்க்கைக்குச் சிறிதும் ஒட்டாத பாடத் திட்டங்களைக் கொண்டதாக கல்வியின் தரம் திகழ்கின்றது.

அடுத்து இன்றைய மாணவர்களின் தரம். ஆரம்பப் பள்ளிகளிலே, அப்பள்ளியில் சேரும் மாணவர்களுக் கிடையே நிலவும் சூழ்நிலையே, எதிர காலத்தில் கல்லூரிகளிலும், இளைஞர்களிடையேயும் விளங்கிடும் நிலைக்கு வித்திடு கின்றது. ஒரு காலத்தில், தாயின் அன்பையும், தந்தையின ஆதரவையும் பெற்ற மாணவன் நல்லொழுக்கப் பண்புகளை யும், கல்வியினையும 'குரு குலம்' எனும் அமைப்பின்கீழ் பெற்றான். இந்நிலையில் பெற்றோர்களின் தேவை யில்லாத தலையீடுகளோ, பொருளாதார, சமூக, அரசியல் குறுக்கீடுகளோ மாணவன் எதிர்கொள்ளவில்லை. ஆனால் இன்று? வீட்டில் தாய் தந்தையர்களின் பிணக்குகளும், மனப்போக்கும் குடும்ப பிரச்சனைகளும் எத்தனை மாணவர்களின் எதிர் காலத்தை அலங்கோலப்படுத்தியுள்ளது என்பது யாவரும் அறிந்ததே. பயிலும் நிலையிலேயே அவர்களிடையே நச்சுக்காளான்களைப் போல் வன்முறையினையும், பால் உணர்வினையும் தூண்டிடும் திரைப்படங்களும், நேர்மையற்ற, சந்தர்ப்பவாத அரசியல் வளர்ச்சியும் விளங்கிடும் அவலம் இன்றைய மாணவர்களின் தீவினைப் பயனேயாகும். பள்ளியில் சேர்த்துவிட்டால் தன் கடமை முடிந்துவிட்டது என்று நினைத்திடும் பெற்றோர்களின் மனப்போக்கால் பெற்றோர்கள் - குழந் தைகள் உறவில் உளவியல் அடிப்படையில் விரிசல் ஏற்படுவது நாளை அவனை இச்சமூகத்தில் ஒரு எடுப்பார் கைப்பொம்மை யாகவோ அல்லது சமூகம் ஒதுக்கிடும் ஒரு தீவிரவாதியாகவோ மாறிட வழி வகுக்கலாம். ஏட்டுப்படிப்பு மட்டுமே அவனையோ அவன் சார்ந்த சமூகத்தையோ உயர்த்திடாது. கற்கும் படிப்பு தார்மீக அடிப்படையில் அமைந்தால், சீரான சிந்தனை யின்மீது படர்ந்தால், அது ஆக்கப் பூர்வமான, ஆரோக்யமான எதிர்காலத்திற்கு வழி வகுக்கும். தொழிற் கல்வியின் பெருமை உணரப்பட்ட இக்காலக்கட்டத்தில் படிக்கும் பாடங்களில் சமய உணர்வு நுழைத்திட சாத்யக் கூறுகள் அமையா விடினும், அச்சமய உணர்வு அவன் உள்ளத்தில, சிந்தனையில் ஊறிட, பெற்றோர்களும், ஆசிரியர்களுமே பெரிதும் பொறுப்பேற்கின்றனர். தங்கள் குறைகளை, பிரச்சனைகளை, தோல்விகளை தங்கள் குழந்தைகள், மாணவர்கள் முன்பேயே விவாதித்துக் கொள்ளும் மனப்போக்கினைப் பெற்றோர்களும், ஆசிரியர்களும் கைவிட்டால், அதுவே தன்னம்பிக்கையுள்ள ஒருஎதிர்கால உணர்வை இன்றைய மாணவர்களிடையே தோற்றுவிக்கும்

அடுத்தது ஆசிரியர்களின் தரம். கல்வி நிலையங்களில் பாடத்திட்டங்களின் அளவுத்தரம் உயர்ந்ததே தவிர, அவற்றைக் கற்றுத்தரும ஆசிரியர்களின் தரம் அதன் அளவு உயர்ந்ததா என்பது சிந்திக்க வேண்டிய ஒன்றுதும். தானாக புரிய வேண்டிய கல்வி, இன்று திணிக்கப்படுகின்றது. அன்றைய குரு நல குரு பலதுறை வல்லுனராக இருந்தார். ஆகை யால்தான் எந்த நேரத்திலும் எந்தக் கேள்விக்கும பதில் கூறிடும் வகையில், ஒவ்வொரு குரு குலமும ஒவ்வொரு பல் கலைக் கழகமாக விளங்கியது. இன்று கல்வி பெருகிவிட்டது என்பதைக் காட்டிலும கல்வி சிதறிவிட்டது என்றே கூறலாம். ஒவ்வொரு கல்விப் பிரிவிற்கும ஒவ்வொரு இடத்தை நோக்கி ஓடி, தன் சந்தேகம் தீர்த்துக்கொள்வதற்குள், காலம் மாணவனுக்கு அரிதாகிவிடுகின்றது, அவனும களைத்துவிடுகின்றான். ஆகையால்தான் அவன் தன்னம்பிக்கையில்லாது, சந்தேகத்துடனே தன் ஆண்டுத் தேர்வை எதிர்கொள்ளுகின்றான். இன்றையக் கல்வி நிலையங்களிலே ஆசிரியர்கள் மாணவர்களிடம் காட்டும பங்குபாடு முற்றும குறைந்தோ அல்லது தன்னல நோக்கோடோ விளங்குகின்றது. இதற்குக் காரணம் ஆசிரியர் பெருமக்கள் நாளும எதிர்கொள்ளும் பொருளாதார பிரச்சனைகள் என்று கூறினாலும். ஆசிரியர்களின் கல்வித் தரம், கற்பிக்கும் பயிற்சித் திறன், தனிப் பண்புகள் ஆகியன இன்று பெரிதும் முக்கியத்துவம் பெறுகின்றன.

ஆகவே பெற்றோர்களே மாணவர்களுக்கு பிரச்சனைக்குரியவர்களாக விளங்காமலும், அடிப்படை ஆரம்பக்கல்வி தார்மிக அடிப்படையில் இருத்தலும், மாணவர்கள் தன்னம்பிக்கையுடனும், தளரா முயறசியுடனும், தங்கள் பொறுப் பினை உணர்ந்து, கற்க வேண்டியவற்றைக் கற்கும் காலத்தில் தவறவிடாமல் கற்றுத் திகழ்வதும், ஆசிரியப் பெருமக்கள் தாங்கள் கற்றதை வியாபாரமாக்கிக் கொள்ளாது, நாளை ஒரு நவபாரதத்தை உருவாக்கிடும் சிற்பிகள் தாங்கள் என்பதை மறவாது, எல்லா வகைகளிலும் தங்கள் தரத்தை உயர்த்திக் கொள்ளலும் ஆகியனவே ஆசிரிய சமூகம் மேலும் சிறப்படைய வழி வகுக்கும்.

# தி. தி. தேவஸ்தானத்தாரின்
# அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி. தி. தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றாகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அரும்பொருட் காட்சியகங்கள்.

தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும் தி. தி. தேவஸ்தானத்தாரிடமும், மற்றைய இடங்களிலும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியகத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இவ்வகத்தை அலங்கரிக்கின்றன.

மற்றொரு அரும்பொருட் காட்சியகம் (எஸ். வி. கோயிற்கலை காட்சியகம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி வடக்கு மாட வீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியகத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத்தாலும், ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் ஏற்றப்பட்டு வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகாணஸம், பஞ்சராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப்பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத் திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றாண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப் பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள், முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

**சிற்ப அளவு முறைகள் :** ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திடல் வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**சிற்பங்கள் :** விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையான ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

**ஆழ்வார்கள் :** தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

**வைதீகச் சடங்குகள் :** அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பரிவில் விளக்கப்படுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் வலியுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புகள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**கலைகள் :** இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப்பட்டுள்ளது. நாட்டியக் கலையின் சிறப்பும் இங்கு விளக்கப்பட்டுள்ளது. மேலும் கி. பி 8-ஆம் நூற்றாண்டு காலத்திலிருந்து நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம் பெற்றுள்ளன. குண்ட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக் கூறும்.

**அனுமதி நேரம் :** காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை
**அனுமதிக் கட்டணம் :** பெரியோர்: ரூ. 1/- சிறுவர்: 0-50

பொறுப்பாளர்,
**எஸ். வி. அரும்பொருட் காட்சியகம்**
**தி. தி. தே. திருப்பதி.**

"இறைவன் ஆதியும் அந்தமும் இல்லாதவன். அலகிலா விளையாட்டுடையான். அனைத்தும் அவனே யாவான்", என ஆன்றோர்கள் கூற அதை வழிமுறையாக ஏற்று இறைவனை ஆராதிப்பதை இன்றும் நடைபெற்று வரும் வழிபாட்டு முறைகள் தெளிவாக்கும்.

இறைவழிபாட்டுமுறை ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு முறையாக அமையலாம். ஒவ்வொரு சமயத்திலும் வெவ்வேறு முறைகளாக

உலகமே வியக்குமளவில் விண்முட்டும் கோபுரங்களும், விதானங்களும் அமைத்துக் கலை வளர்த்தனர் தமிழர்கள். இயல், இசை, கூத்து என முத்தமிழால் இறைவனைப் பணிந்து இன்னருள் பெற்று மங்காப்புகழ் கொண்டு மாநிலம் போற்ற, நிலைத்த பேறு பெற்றனர் இசைத்தமிழால்.

எனவே இறையும், இசையும் இரண்டறக் கலந்திடச் செய்தமையாலேயே இறைபக்தி—இறைப்பற்று — இறையுணர்வு எங்கும் சிறந்தோங்கியது.

விருப்பத்திற்கேற்பகாட்சி கொடுத்து அருள் பாலித்த தன்மைகளை அழகுத் தமிழ்பாக்கள் கூறும்.

எத்தனையோ நூல்கள் தோன்றிடினும் அத்தனை நூல்களும் அவனியில் என்றும் நிலைத்த குன்றாப் பெருமையினைக் கொண்டதில்லை. மாறாக இறைவழிபாட்டு நூல்களும், இறைவனது திருவிளையாடல்களைத் தெளிவாக்கும் நூல்களும், வாழ்வில் இருள கற்றி ஒளி ஏற்ற அமைந்த பக்திப் பாக்களும், உயர்மிகு பேரின்பப் பெரு



# இறையும் இசையும்

அமைந்திருக்கலாம். ஆனால் எச்சமயத்திலும் எந்த வழிமுறைப்பாட்டிலும் "இசை" இடம் பெற்றிருப்பது உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்கும்.

"கல் தோன்றி மண் தோன்றா காலத்தே முன் தோன்றிய மூத்த தமிழ்" எனத் தமிழின் சிறப்பு உணர்த்தப்படுவது யாவரும் அறிவோம். தமிழ், இறை வழிபாட்டில் இசையாக இணைந்து இசை பெற்றது. எனவே தமிழிசைத் தனிப்பெருந்தொண்டில் இறையருள் பெற ஏற்றதொரு கருவியாக அமைந்ததை அறிகிறோம்.

அதுபோலவே முத்தமிழின் இனிமை எத்திக்கும் ஏற்றமுற எழிலுற விளங்குகிற தென்றல் ஏது மாற்றம்?

அகர, உகர, மகரத்தின் திருவாய் அமைந்த "ஓம்" எனும் சக்தியே பிரணவம் எனும்போது அந்த "ஓம்" எனும் சொல்லும் இசைவடிவானது என்பதை நுண்ணிதே காணின் தெள்ளிதே விளங்கும்.

அருவாய், உருவாய், அருவுருவாய் உள்ள இறையே வழிபடுவோருடைய

பரமக்குடி வெ. சுந்தரம்

வாழ்வு நல்கும் பாடல்களும் நின்று நிலைபெற்று, இறையே போல் இசையும் தனிப் பெருந்தகைமையைக் கொண்டுள்ளது.

கம்பர் பாடிய ராமகாதை தமிழ்ப் பாக்கள் இயற்றமிழாயினும் இசைத் தமிழுக்கும், நாடகத் தமிழுக்கும் ஏற்புடைத்தாயிற்று. தமிழையும் தமிழில் திகழ்ந்துள்ள இசையும் அவ்விசையால் இறைவனின் திருவிளையாடலாகிய ராமாவதாரத்தையும் ஒன்றாகப் பின்னிப் பிணைந்து பிரிக்க முடியாத நிலையில் அமைந்திருப்பதால்கவிச்சக்கரவர்த்தி கம்பன்எனப் புகழால் இசை கொண்டான்.

கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும் என்ற கருத்தினைப் பழமொழியின் தன்மையில் பாடும் என்ற கருத்து ஏன் வலியுறுத்தப்பட்டதென நோக்க வேண்டும். கம்பனின் கவிதைகள் பாடுதலுக்குரியன போல் கவிதைக் கற்றோர் யாவரும் கம்பன் வீட்டாரேயாகி கவிதைக் கற்றோரும் கவிதையாத்து இசையின்பம் நல்க வல்லவர்களாவார்கள் என்ற பொருளைத்தான் விளக்கும். இசை நயம் மிக்க கவிதையாத்திடுவர் என்பதை வலியுறுத்தவே பாடும் எனச் சுட்டப்பட்டது.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகையர் தெலுங்கிலே கீர்த்தனங்கள் பல இயற்றியும், இசையோடு பாடியும் மொழிவளர்த்து முதல்வன் புகழ்பாடி பேறுபெற்றார். முன்னூறு கோடி ராம நாமம் அவர் நாவிசைத்த பின்னே இறைவன் காட்சியைக் கண்டானந்தித்ததாகக் கூறப்படுகிறது.

ஒரே பாடல் மூலம் கோயில் கதவம் அடைபட்டதும் அதே போல ஒரே பாடல் மூலம் தானே தாழ் திறந்ததும் தண்டமிழ் பாடல் கண்ட முறையே!

இறைவனைத் தன் இனிய நண்பனாகக் கொண்டதோடு, தனக்கு ஏவிய பணி செய்திடுமாறும் அமைத்துக் கொண்ட சுந்தரர் செயலும் அழகிய தமிழ் பண்ணால்தானே!

அன்னை உமையவள் அருட்பால் அளித்திட, அதை அருந்திய சம்பந்தன் பிள்ளைப் பிராயத்திலேயே, "தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதி சூடி" என அம்மையப்பனை அழகுறப்பாடியதும் தமிழிலேதான். இவரது தமிழ் இசைக்கு விரும்பித்தானே பார்வதி தேவியாரை அருள் நல்கச் செய்தது. இசையால் இறைவன் புகழ்பாடி இறந்தவரை உயிர் பெறச்செய்வித்தும் அடைத்த கதவு திறந்திடச் செய்த அற்புதமும் இசையில் தானே!

இறையோனின் திருப்புகழைப் பாடி, "திருப்புகழ்" என்றே பெயர் கொண்டிட்ட அழகு சந்தப் பாடல்களை அருணகிரியார் பாடிட, முதலடி எடுத்துக் கொடுத்ததும் ஆறுமுகன் தமிழ் மேல் கொண்ட தீராக்காதலே என்பதை அறியும் போது இறையும் இசையும், உடலும் உயிருமாய் இணைந்தது என்பதை அறியாதார் யார் உளர்?

இறைவன் ஏகாந்தமாக அர்த்தநாரியாக ஆனந்தக் கூத்தாட இசையின்றி அமைந்திட முடியுமோ? தவிர இவ்வானந்தக் கூத்தினை திருஉத்திர கோச மங்கையில் கண்டானந்தம் கொண்ட மாணிக்க வாசகப் பெருமான், "யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்பதற்கேற்ப இறைவனிடம் பக்தர்கள் யாவரும் இறையின் எழிற்கோலக் கூத்தினைக் காண அருள்பாலிக்க வேண்டுமென விண்ணப்பிக்கவும், இறைவன் மாணிக்க வாசகரின் வேண்டுகோளை ஏற்று, தில்லையிலே திருவருள் காட்ட மனங்கொண்டதும் தில்லை நடராஜனை நினைக்க தொல்லை யாவும்போம் என்பதும் இன்று மட்டுமல்ல என்றும் நிலவும் உண்மை. இதற்கு யாது காரணம்? மணிவாசகப் பெருமான் மணியாரமாக இசையாரம் சூடிப்பெற்ற வரமன்றோ!

இசைத் தொண்டன்றிவேறு ஏதும் செய்தறியாத தாழ்த்தப்பட்ட இனமாகக் கருதப்பட்ட திருப்பாணாழ்வார், கோயிலின் தலைமை பட்டாச்சாரியாரால் தாங்கி வருமாறு செய்தும், திருப்பாணாழ்வாரின் பக்திப் பாடல்களைத் திரு அரங்கன் கேட்டும் ஆட்கொண்டாரே! இனத்தால் செய்முறையில் ஏற்கப்பட்ட தன்மையல்லவே! தமிழிசையின்பால் தணியாத் தாகம் கொண்ட திரு அரங்கன் தன்பால் திருவடி நீழலைத் தந்தருளினார் திருப்பாணாழ்வாருக்கு. இது தானே உண்மை.

கோதை என்னும் குயில் கூவிய இசையினிலே கொள்ளை போன உள்ளமதை மெள்ளவே திரும்பக்கொள்ள கோதை சூடிக்கொடுத்த மாலையை ஏற்று அவளுக்கே மணமாலை சூட்டி மகிழ்ந்தாரே ரங்கமன்னார் திருவில்லிபுத்தூரில். இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு தன் இசையால் இறைவனை ஆண்டாள். எனவே ஆண்டாள் எனும் அழியாப் புகழ் கொண்டாள்.

ஆண்டாள் தன் திருப்பாவையில் "ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி" எனக் கூறும் பொருள் உணரத் தக்கது. இறைவன் பெயரைச் சொல்வதைக் காட்டிலும் பாடுதல் சிறப்புடைத்து என்பது தெற்றெனப் புரியும்.

திருமழிசை ஆழ்வார் காஞ்சியிலே பெருமாளிடம் "பைந்நாகப் பாயைச் சுருட்டிக் கொள்" எனப்பாடியவுடன் ஆழ்வாரும் அவர் சீடர் கனிகண்ணனும் முன் செல்ல, இறைவனாகிய சொன்னதைச் செய்யும் பெருமாள் பின் செல்ல ஏற்பட்ட நிலையும், திருமழிசை ஆழ்வாரின் இசை இன்பத்தில் பெருமாள் கொண்ட பாசம் தானே காரணம்.

மதுரை மீனாக்ஷி அம்மன் கோயிலிலே குமர குருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாடுகிறார். அரசர் பாண்டியன் உள்ளிட்ட பல்லோரும் குமர குருபரரின் இசையின் நாதத்தில் இசைந்திருக்க, அன்னை மீனாட்சி மட்டும் வந்து இன்பம் துய்க்காது இருப்பாளோ?

அழகிய சிறு பெண் பிள்ளையாக அவைக்கு வந்து, குமரகுருபரரின் இசை நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்துள்ள ஏற்றமுடை பாண்டியனின் மடியமர்ந்து குமரகுருபரரின் இசை இன்பத்தில் இரண்டறக்கலந்து நின்றாள் என்பதை அறியும் வரலாற்றால் இறைவனை அடைய இசையே வழி என்பது பெறப்படும்.

"கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்", என்ற கூற்றுக்கு மறுப்பளிக்கும் வகையில் மாணிக்கவாசகப் பெருமான்,

**" கண்டேன் அவர் திருப்பாதம்**
**கண்டறியாதன கண்டேன் "**

எனப் பாடுகிறரே! கண்டவர் விண்டுரைத்த உண்மையன்றே அவர் பாடலின் கூற்று.

நாமதேவர் என்ருெரு பக்திப் பண்ணிசைக்கும் பரம பக்தர். பெயருக்கேற்ப இறைவன் நாமங்களைப் பண்ணுகப் பாடி மகிழ்வார். இறைவன் உறைந்த நல்லூர்களைக் கண்டானந்திருக்க விரும்பினுர்.

காசிமுதல் ராமேசுவரம் வரை யாத்திரை மேற்கொண்டார். ராமேசுவரத்திலிருந்து திரும்புங்கால் வந்த வழி மாறி வேறு வழி சென்ருல் பல்வேறு திருத்தலங்கள் காணலாமே என்ற அவாவினுல் உந்தப்பட்டு, அவ்வெண்ணத்திற்கேற்ப திரும்புங்கால் நாகநாதர் திருக்கோயில் வந்தடைகின்ருர்.

நாகநாதர் கோயில் என்னும் அழகிய சிற்றூர் இன்று நயினுர் கோயில் என மருவி வழங்கப்படுகிறது. இராமநாதபுரம் மாவட்டம் மூன்ருகப் பிரித்த பின்னே புதிதாகத் தோன்றிய பசும்பொன் மாவட்டத்திலே அமைந்துள்ள ஊர் நயினுர் கோயில்.

சௌந்தர நாயகி சமேத நாகநாத சுவாமியின்பால் பக்திப் பரவசம் கொண்டு பாடலுற்ருர் நாமதேவர். இசைவெள்ளமதில் நீந்தி இன்புற மக்கள் வெள்ளம் நிரம்பியது. நேரம் போவதே தெரியவில்லை.

இறையனுருக்குரிய நித்யப் பணிகள் நேரம் தவருது நடத்த முடியாத நிலை ஏற்பட்டதை உணர்ந்த கோயில் அர்ச்சகர் நாமதேவரிடம், "தாங்கள் கோயிலின் மறுபுறமுள்ள தெப்பக்குளக்கரையில் அமர்ந்து இசையின்பம் தந்திடின் நெருக்கடியின்றி அனைவரும் இசைப் பயன் பெறுவர். நித்ய விதிகளும் நியமப்படி நடைபெறும்", எனப் பணிவுடன் பகன்ருர்.

அர்ச்சகரின் அன்புக் கட்டளைக்கு அடிபணிந்து தெப்பக்குளக்கரையில்



ஸ்ரீ சிகைநாக சுவாமி கோயில் - குடுமியாமலை

சென்றமர்ந்து கோயில் சுவர் நோக்கிப் பண்ணிசைக்கப் பக்தர் குழாம் ஆழி நீரன்ன அருகமர்ந்து கேட்கின்றனர்.

கிழக்கு நோக்கியிருந்த இறையுரு இசை வரும் திக்கை நோக்கியிருக்கக் கண்டு அர்ச்சகர் அதிசயிக்கும் அவ்வேளை சுவர் பகுதி வாயிற் பகுதியாக வடிவு மாறுகிறது. அர்ச்சகர் உள்ளமும் உடலும் நடுங்க, ஆலயப் பணியாளர்கள் உடனிருந்தோர் அச்சமுற, "நாம் நாமதேவரின் இசை இன்பத்தில் மூழ்கி திசை மாறியுள்ளோம். நாமதேவரின் இசையை நேரில் கேட்கவே இம்முறை செய்தோம். இனி இதுவே வாயிலாக இலங்க அமையும்," என அசரீரியாக ஒலிக்கப்பட்டது அறிந்ததும் பணிந்தனர். நாமதேவரின் பக்தியிசை இறைவனையே திசை மாறி இருக்கச் செய்தது. இன்றும் திருக்குளம் நோக்கிய வாயிலேதான்-கிழக்கு நோக்கியல்ல.

இறையும் இசையும் இசையால் திசைமாறி கோயில் கொண்ட புண்ணியத் தலம்—நாகநாதர் கோயில்.

காம்போதியில் கான மழை பொழிந்து கைலயங்கிரிநாதனை கருணைகொள்ளச் செய்த இராவணன் இசையால் தானே இறைவனைத் தன் மனத்துள் உறையச் செய்ய முடிந்தது.

இறைவன் எல்லோருக்கும் உரியவன்—அதுபோல இசையும் யாவருக்கும் உரியது. ஆதி அந்தமில்லான் இறைவன். அஃதேபோல் இசையும் அளவிட முடியாது. எப்பருவத்தினருக்கும், எச் சமயத்தினருக்கும் இறைவன் அருள்பாலிப்பான். இசையும் சாதி, சமய, இன வேற்றுமையின்றி இன்பம் தர வல்லது.

மாந்தரின் எண்ணப்படி இறைவன் திருவுருவைக் கொண்டு வழிபடலாம். அதுபோல் இசையும் அவரவர் மனோலயத்திற்கேற்ப இசைத்து இன்புறலாம்.

எந்நேரமும் இறைவனை வழிபடலாம். எந்நேரமும் இசையினைப் பாடியோ, கேட்டோ அனுபவிக்கலாம். இறைவழிபாட்டிலே அமைதியும் நிறைவும் கொள்ளும். இசையிலே ஆனந்தமும் அமைதியும் நிறையும்.

இறைவனை எங்கும் எதிலும் காணலாம் எனினும் கோயில் ஒரு

சிறப்பான வழிபாட்டுத் தலமாகும். இசையை எங்கும் யாரும் பாடலாம் என்ற போதிலும், கேட்கலாம் என்றாலும் இசையரங்குகளில் பாடியும், கேட்டும் இன்புறல் இனிமை தரும்.

இதுபோன்ற சீரிய தன்மையினாலேயே நம் முன்னோர் தாலாட்டு, வழிநடைப்பாட்டு, ஏற்றப்பாட்டு, கண்ணும்பிடிக்கும் பாட்டு, நெல்குத்தும் பாட்டு, நடவுப் பாட்டு, அறுவடைப்பாட்டு, கும்மி, கோலாட்டம், மணவிழாக்களில் மங்கலப்பாட்டுக்கள், இழவு வீடுகளிலும்கூட ஒப்பாரி, தூங்கச் செய்யவும் விழிப்படைவதற்கும், போருக்கும் புறப்பாட்டிற்கும், ஊர்வலத்திற்கும் உள்ளம் மகிழ்விற்கும் என ஒவ்வொரு அழகிற்கும் இசைதனை முறைமைப்படுத்தினர்.

சமய நெறி வளர்த்த சான்றோரின் செயல்கள் யாவும் இசை வடிவாகியிருந்ததை எண்ணுங்கால் இறையும் இசையும் ஒன்றே என நன்றே அறியலாம்.

ஒருவா தனக்குத்தானே பேசிக்கொண்டிருந்தால் அவரைப் பைத்தியம் எனப் பகரும் இவ்வுலகு. இசையில் ஈடுபட்டு தனக்குத்தானே பாடிக்கொண்டு சென்றாலோ, பணிபுரிந்தாலோ இவ்வுலகு தவறாக எண்ணுவதில்லையல்லவா?

இசையால் இறையைக் காண வேண்டின் நல்லிசைக்கு முக்கியத்வம் தரப்படல் வேண்டும். எளிமையும் இனிமையுமாக இசைப் பாடல்கள் பக்தியை வளர்க்க வழிவகுக்க வேண்டும். முன்னோர்கள் ஆக்கியளித்த பண்ணிறைப்பாக்களோடு எண்ணற்ற இனிய பாக்கள் இறைப்பற்றில் திளைக்கச் செய்து காலங்காலமாய் நிலைபெற்றுய்யவழித் தோன்றல்களுக்கு வழிவகுத்துத் தரல் வேண்டும்.

ஓம் எனும் நாதம் இறையே
ஓம் எனும் ஒலியும் இசையே
பக்தி தருவது மனச் சக்தியே
சக்தி நிறைவுற சாலவும் இசையே!

இறைவனுக்கென்றே அமைக்கப்பட்ட திருக்கோயில்களில் பல, பாடல் பெற்றத் தலங்கள். ஆனால் அத்தலங்களில் ஒரு சில கோயில்களில் மட்டுமே பண்ணிசைக்கப்படுகிறது.

தேவாரம், திருவாசகம், திருப்புகழ், திவ்யப்பிரபந்தம், திருஅருட்பா போன்ற இசைப்பாக்கள் எல்லாக் கோயில்களிலும் இசைத்திட ஏற்ற இசை வல்லுநர்கள் பொறுப்பில் அமைக்க வேண்டும்.

காலை நேரம், மாலை நேரம் போன்று அந்தந்த இடங்களின் வசதிக்கேற்ப பாலர்கட்கு பக்திப் பண்கள் கற்பிக்க வழிமுறைப்படுத்தப்பட்டால் எல்லோருக்கும் பயன்மிக்கதாய் வருங்காலத்திற்கும் வழிகாட்டும் கலைக்கூடமாகக் கோயில்கள் அமைய வேண்டும்

நல்லன நாடும் விழாக்கள் யாவிலும் சமய, இன, வேறுபாடின்றிக் கூட்டு வழிபாடு நடத்திட பக்தியும் சக்தியும் கூடிட வாய்ப்பாகும்.

முழுமையான ராகஞான இசைப் பள்ளி வேறு—பக்திப் பாடல்கள், பழம்பெரு ஞானிகள் பாடல்கள் எளிய இசையமைப்பில் பாடுவது வேறு.

எளிய இசையமைப்பால் திருப்பதிகங்கள் கற்போரது உள்ளத்தில் எழுச்சியை ஏற்படுத்தி இன்பம் துய்த்திடச் செய்யும். பாலரும் இசைப் பயனால் இறையருள் பெற்றிட ஏதுவாகும்.

மதுரையில் மீனாட்சியம்மன் கோயிலில் "இசைத்தூண்" உள்ளது. அதனைத் தட்டும்போது ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு ஓசை எழும்பி ஏழு சுரத்தின் இனிமை கூட்டுவதுபோல, பழங்காலத்தில் நம் முன்னோர்கள் கல்லிலும் உலோகத்திலும் இசை வடித்தனர்.

அதுபோல நாமும் நமது சந்ததியினருக்கு இசை நுணுக்கங்களும், இசைப் பயிற்சியும், இசைக் கருவிகள் கையாளும் முறைகளும் கோயில்களில் கற்பிக்கச்செய்தாலேயே இசை நலிவுறாமல் திறம்படத் தமிழிசையினைச் சிறப்புறச் செய்ய முடியும்.

பாடல்களின் பண்ணும், பொருளும், பயனும், பாடல் பாடியவரின் வரலாறும் அறிந்து பக்தியுடன் பண்ணிசைக்கச் செய்தாலே இசைப்பயன் முழுமையாக அமைந்திடும்.

கோயில் வளர்ச்சி என்பது பற்பல கோயில்கள் புதிது புதிதாகத் தோன்றுவது என்பதல்ல. இறையும் இசையும் ஒன்றென அமைந்த நம் முன்னோரது நெறிமுறையினைப் பேணிக் காக்க பண்டைய பக்தி

(43-ம் பக்கம் பார்க்க)

## உணவருந்தும் முன்னர் சொல்ல வேண்டியவை

1) ஹரிர்தாதா ஹரிர்போக்தா
ஹரிரன்னும் ப்ரஜாபதிர் :
ஹரி:விப்ர: ஸரீரஸ்து
புங்தே போஜயதே ஹரி:

2) ப்ரம்மார்ப்பணம் ப்ரம்மஹவி:
ப்ரம்மாக்னௌ ப்ரம்மணா
ஹுதம்
ப்ரம்மைவ தேன கந்தவ்யம்
ப்ரம்ம கர்ம ஸமாதினா.

3) அஹம் வைஸ்வானரோ பூத்வா
ப்ராணினாம் தேஹமாஸ்ரித:
ப்ராணாபான ஸமாயுக்த:
பசாம்யன்னம் சதுர்விதம்.

4) அஸதோ மா ஸத்கமய
தமஸோ மா ஜ்யோதிர்கமய
ம்ருத்யோர் மா அம்ருதம்கமய
ஓம் ஸாந்தி: ஸாந்தி: ஸாந்தி:

திரு. எம். எஸ். பாலசுப்ரமண்யன்
சென்னை.

# ஆழ்வார்களின் அருளிச்செயலும் அகப்பொருள் மரபும்

முன்னுரை :

இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் பன்னிருவர் அருளிய பாசுரங்கள் அருளிச் செயல் என்று போற்றப்பெற்று வருபவை. பெரியவாச்சான் பிள்ளை என்னும் உரையாசிரியரால் இவை ஈரத் தமிழ் என்று போற்றப் பெறுபவை. 'வடதிசை பின்பு காட்டி' (திருமாலை-19) என்ற தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாசுர அடிக்கு உரை செய்த பெரியவாச்சான்பிள்ளை, 'ஆழ்வார்களின் ஈரத்தமிழ் நடையாடாது முரட்டு சமஸ்கிருதம் நடமாடும் தேசம் அன்றே' என்று வட தேசத்தைக் கூறினார். ஈரத்தமிழ்ப் பாசுரங்களில் பண்டைய தமிழ் அகப் பொருள் மரபு எவ்வாறு போற்றப் படுகின்றன என்று காண்பதே இக் கட்டுரையின் நோக்கமாகும். ஆழ்வார்கள் திருமாலைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் உருவகித்துப் பாடிய பாடல்களில் அகப் பொருள் மரபு போற்றப் பெறுகின்றது. இறைவனுக்கும் அடியவர்க்குமுள்ள உறவு நவவித சம்பந்தமாக-ஒன்பது நிலைகளாகப்பேசப்பெறும். அவற்றுள் தலைவன்-தலைவி உறவு நாயக நாயகி பாவம்-சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. பின் வந்த நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை ஆகிய உரையாசிரியர்களும் அழகிய மணவாளப் பெருமான் நாயனாரும் (ஆசாரிய ஹிருதயம் நூல் செய்தவர்) மணவாள மாமுனிகள் என்ற உரையாளரும் இந்த அகப்பொருள் பாசுரங்களுக்குத் தத்துவ விளக்கம் தந்தனர். கவிதையில் அகப்பொருள் கூறு இடம்பெற, உரையாசிரியர் அதற்குக் குறியீட்டு நிலையில் தத்துவ விளக்கம் தந்தனர். வைணவ உரையாசிரியர்களைப் பொறுத்தவரையில், ஆழ்வார் பாசுரங்களில் எல்லாச் சொல்லும் புறநிலையில் ஒருபொருளும் புதைநிலையில் தத்துவப்பொருளும் உடையவை என்ற இலக்கியக் கோட்பாட்டை உடையவர்கள். எனவே, இத்தகு விளக்கங்கள் வந்தன. மேலும் அக் காலச் சமூகச் சூழலுக்கு ஏற்ப, தமிழ் மரபைப் போற்றும் கவிதையை வடமொழி தத்துவச் சிந்தனைகளை விட-வேதங்களை விட-உயர்ந்தவை (தமிழ் மறை எனவும், வேதம் தமிழ் செய்த மாறன் எனவும், உபநிடதம் தமிழாயிற்று எனவும், செய்ய தமிழ் மாலைத் தெளிய ஓதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே எனவும் கூறுவது இவண் அறியத்தக்கது) என்று கூறினர். எனவே, இத்தகைய தத்துவ விளக்கம் தந்தனர். அகப் பொருள் மரபையும் தத்துவ விளக்கங்களையும் காண்போம்.

## அகப்பொருள் மரபில் பாடிய ஆழ்வார்களும் பாசுரங்களும் :

பன்னிரு ஆழ்வார்களில் ஆண்டாள் இயல்பாகப் பாடியவர். உரையாசிரியர் அதனைப் பள்ளமடை என்பார். ஏனையோரில் பெரியாழ்வார், குலசேகரர், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் அகப்பொருள் மரபில் பாடியுள்ளனர். ஆழ்வார்கள் தம்மைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் எண்ணிப் பாடியவை இவை. இறைவனாகிய தலைவன்முன் (அவன் ஒருவனே புருஷோத்தமன்) அனைத்து உயிர்களும் பெண் தன்மை அடைந்து விடுகின்றன. உயிரின் தன்மை-சேதனனின் தன்மை-அவனுக்குடைமையாம் தன்மை ஆதலின் பெண்தன்மை இயல்பாக வந்துவிடுகிறது என்பர். ஆடவரும் பெண்மை அவாவும் இயல்பினனாக ஈசன் உள்ளான் என்பதால், இறைவனது வடிவழகும் சீலகுணமும் படுத்தும்பாடு என்பதால் பெண்தன்மையை ஆழ்வார் ஏறிட்டுக்கொள்ள-வலிந்து அம்மாற்றம் பெறவில்லை-அந்நிலை தானாக வந்தடைகிறது.

பெரியாழ்வார் இரண்டு பத்துகள் (3.7, 3.8) அகப்பொருள் அமைப்பில் பாடியுள்ளார். இரண்டும் தாய் கூற்றில் அமைந்தவை. குலசேகரர் பெருமாள் திருமொழியில் ஒரு பத்து (6) இவ்வாறு பாடியுள்ளார். அது தலைவி கூற்றில் அமைந்தது. திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் 19 பத்துகள் அகப்பொருள் அமைப்பில் பாடியுள்ளார். (2.7, 2.8, 3.6, 3.7, 4.8, 5.5, 7.5, 8.1, 8.2, 8.3, 9.2, 9.4, 9.5, 9.9, 10.8, 10.9, 11.1, 11.2, 11.3) இவை தலைவி, தாய்-நற்றாய், தோழி கூற்றுக்களில் அமைந்தவை. திருநெடுந்தாண்டகத்தில் 21 பாசுரங்கள் அகப்பொருள் அமைப்பில் உள்ளன. இவை தாய்

டாக்டர். சு. வேங்கடராமன்,
மதுரை.

இரண்டும் தலைவி கூற்றாக (இடையிடையே தாய், தோழி, கட்டுவிச்சி கூற்றுக்களுடன்) அமைந்தவை. நம்மாழ்வாரின் திருவாய் மொழியில் 27 பத்துகள் அகப்பொருள் அமைப்பில் கூற்றாகவும் தலைவி கூற்றாகவும் உள்ளன. சிறிய, பெரிய திருமடல்கள் உள்ளன. (1.4, 2.1, 2.4, 4.2, 4.4, 4.6, 4.8, 5.3, 5.4. 5.5, 5.6, 5.9, 6.1, 6.2, 6.5, 6.6, 6.7, 6.8, 7.2, 7.3, 7.7, 8.2, 8.9, 9.5, 9.7, 9.8, 9.9). இவை தலைவி, தோழி, தாய் கூற்றுக்களில் உள்ளன. திருவிருத்தம் அகப்பொருள் அமைப்பில் பாடப்பட்ட ஒன்றாகும்.

பின்வந்த ஈட்டுரைகாரரான நம்பிள்ளையும் பெரியவாச்சான்பிள்ளையும் கவிதையின் நேர்பொருளை

விளக்குவதுடன் உள்ளுறைப் பொருளாகத் தத்துவ விளக்கம் தரமுற்பட்டனர். இவர்களின் முயற்சி திருவாய்மொழிப் பாசுரங்களில் மிகுதியாக அமைந்தது. பதின்மூன்றும் நூற்றுண்டின் பிற்பகுதியில் பிள்ளைலோகாசாரியார், வேதாந்த தேசிகர் ஆகிய இரு வைணவச் சான்றோர்களும் தத்தம் கருத்து விளக்கங்களால் வைணவத்தில் முறையே தென்கலை வடகலை மரபைப் போற்றினர். இதன் விளைவாக பிள்ளைலோகாசாரியார், இளவலான அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் என்ற சான்றோர் ஆசார்ய ஹிருதயம் (மாறன் திருவுள்ளம்) என்னும் நூலை நம்மாழ்வாரையும் அவர்தம் பாடல்களையும் ஏற்றமுடையதாக நிறுவுவதற்காக எழுதினர். இந்நூலில் அகப்பொருள் கூறுகள் யாவும் உள்ளுறைப் பொருளாகத் தத்துவ விளக்கம் உடையவை என்று நிறுவப்பட்டது. இந்த உள்ளுறை விளக்கம் கூறப்படாமல் அமைந்த பிறரின் பாசுரங்களில் வேறு அகப்பொருள் கூறுகளும் உள்ளன.

அகப்பொருள் மரபு :

திவ்ய பிரபந்த பாசுரங்களில் தலைவி, தாய், தோழி ஆகிய மூவர் கூற்றுக்கள் இடம் பெற்றுள்ளன. பிரிவாற்ருது தலைவி புலம்பல், தலைவி ஆற்ருமை கண்டு தாய் புலம்புதல், தலைவியின் ஆற்ருமைத் துயர் கண்டு தலைவனை விளித்துத் தாய் பேசல், உருவெளிப்பாடு கண்டு தலைவி கூறல், தலைவனிடம் சென்று செய்தி கேட்டு வருமாறு தலைவி வண்டு, நாரை, பறவைகள் இவற்றைத் தூதுவிடல், தலைவியின் உடன்போக்கு எண்ணி தாய்-நற்ருய் இரங்குதல், தலைவியின் துயர்கண்டு தலைவனைத் தாய் இயற்பழித்து மொழிதல், தலைவியின் ஊடற்றிறம், வெறி விலக்கு, அயல் மணம் விலக்கு, தாயாரைத் தலைவி மறுத்துரைத்தல், மடலூரத் தலைவி துணிதல், இரவு நீட்டிப்பிற்குத் தலைவி வருத்தல், அறத்தொடு நிற்றல், தலைவன் ஊருக்குச் செல்ல தலைவி துணிதல், அங்ஙனம் சென்ற தன்மகள் நினைத்து தாய் புலம்பல், மாலைப்பொழுதுக்கு இரங்கல் என்ற துறைகளில் இப்பாசுரங்கள் அமைந்து உள்ளன.

பழைய அகப்பொருள் மரபைப் போற்றுவதுடன் புதியநாகச் சில துறைகளிலும் ஆழ்வார்கள் பாடியுள்ளனர். தலைவியின் பிரிவாற்ருமை காரணமாகத் தோழி இயற்பழித்துப் பேசும் மரபிற்கு மாருக, தாய் தலைவனை இயற்பழித்துப் பேசுவதாக ஆழ்வார் பாடுகிருர். தலைவியின் துயரம் கண்டு, காதல் நோய் செய்த தலைவனைப் பார்த்து-எதிர்எதிராக நின்று (திருக்கோயில் உள்ள அர்ச்சாவதாரமூர்த்தி முன்பாக) பேசுவதாகத் தாய் புலம்புகிருள்.

"கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும்
தாமரைக் கண் என்றே தளரும்
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்
டென்னும்
இருநிலம் கைதுழா விருக்கும்
செங்கயல் பாய்நீர்த் திருவரங்க
கத்தாய்
இவள்திறத் தென்செய் கின்ருயே"
(திருவாய் 7.2.1)

மகளிர் மடல் ஏறுதல் கூடாது என்ற பழைய மரபிற்கு எதிராக, மடலூரத் துணிகிருள் தலைவி என்று ஆழ்வார் பாடுகிருர். சிறிய திருமடல், பெரிய திருமடல் திருமங்கையாழ்வாராலும், மடல்திறம் நம்மாழ்வாராலும் பாடப் பெறுகின்றன.

"தானும் நிறையும் கவர்ந்தென்னை
நன்னெஞ்சம் கூவிக்கொண்டு
சேனுயர் வானத் திருக்கும் தேவ
பிரான் தன்னை
ஆணையென் தோழீ உலகு தோறு
அலர் தூற்றிஆம்
கோணைகள் செய்து குதிரி யாய்
மடல் ஊர்துமே"
(திருவாய் 5.3.9)

தலைவனைத் தேடி அவன் ஊருக்குத் தலைவி போகத் துணிவதாக, நினைப்பதாக, அவ்வாறு போன தன் மகள் (தலைவி) நினைத்துத் தாய் புலம்புவதாகப் பழைய அகமரபில் பாடல் இல்லை. ஆழ்வார்கள் அவ்வாறு பாடியுள்ளனர்.

"உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும்
வெற் றிலையும் எல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்றென்
றேகண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன்சீர் வளம்மிக்
கவனூர் வினவி
திண்ணம் என்இள மான்புகும்
ஊர்திருக் கோளூரே"
(திருவாய். 6.7.1)

இங்கெல்லாம் பழைய அகமரபைப் போற்றுவதுடன் புதிய துறைகளில் பாடுகின்றனர். தலைவனுகிய திருமால் குடிகொண்ட ஊர் (திவ்ய தேசம்) தேடிப் போதல், அவன் முகம் காணல், அவ்வாறு தரிசனம் கிட்டாதபோது அவனை அடைய மடலூரத் துணிதல் என்பவை உணர்வு வெளிப்பாட்டின் உச்சநிலையாக உள்ளன. அவனை அடைய வேண்டும் என்று மனம் துடிக்கக் காரணம் அவன் முகமும் அழகும் படுத்தும் பாடு. ('ஒரு நாள் முகத்தில் விழித்தார்க்கு இத்தனையிறே' என்று ஸ்ரீ வசனபூஷணம் கூறும்.) அத்தகு காதல் கைம்மிக்க விடத்தில், வரம்பு கட்டி உணர்வை அடக்கி வைக்க இயலாமையால் மடலூரத் துணிகின்ருள் தலைவி. கவிதை நிலையில் பார்க்கும்போது உணர்வு முதன்மையாகின்றது. தலைவி பிரிவுத் துன்பத்தால் வாடியிருக்க, தலைவன் அருள் செய்யாமல் இருக்க-அரவணைப் பள்ளியில் உறங்குவது கண்டு தோழி, இவள் துயிலின்றி வாடணைக்கு அறிதுயில் ஒரு கேடோ என்று பழிக்கும் துணிவை இங்குப் பார்க்கலாம்.

"இறையோ இரக்கினும் ஈங்கோர்
பெண்பால் எனவும் இரங்காது
அறையோ எனநின் றதிரும் கருங்
கடல் ஈங்கிவள்தன்
நிறையோ இனிஉன் திருவரு ளால்
அன்றிக் காப்பரிதால்
முறையோ அரவணை மேல்பள்ளி
கொண்ட முகில் வண்ணனே"
(திருவிருத்தம்-62)

தலைவியின் துயரம் மிகுந்தவிடத்தில், கட்டுப்படுத்தி, நோய் செய்தவன் மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணன் எனக் கண்டுணர்ந்த கட்டுவிச்சி, நோய்க்கு மருந்து கூறுகிறார்:

"வாரா யினமுலை யாள்இவள் வானோர்
தலைமகனும்
சீரா யினதெய்வ நன்னோய் இது
தெய்வத் தண்ணந்துழாய்த்
தாராய பினும்தழை யாயினும் தண்
கொம்ப தாயினும்கீழ்
வேரா யினும்நின்ற மண்ஆயி னும்
கொண்டு வீசு மின்களே"
(திருவிருத்தம்-53)

இவ்வாறு கவிதை உயிர்த் துடிப்பு மிக்கதாக உள்ள திறத்தை அருளிச் செயலில் காணலாம்.

**அகப்பொருள் மரபு - தத்துவ விளக்கம்:**

நம்மாழ்வாரின் பாசுரங்களை அடிப்படையாகக் கொண்டு, அதில் பயின்று வரும் அகப்பொருள் கூறுகளுக்குத் தத்துவ விளக்கம் தரத் தலைப்பட்டனர். பாடல்களின் உள்ளடக்கத்தைக் கொண்டு பகுத்தாய்ந்து மாறன் திருவுள்ளம்-ஆசார்ய ஹிருதயம் நூல் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரால் இயற்றப்பட்டது. அகமரபுக் கூறுகள் மிகுதியாக அமைததுப் பாடியமை காரணமாக நம்மாழ்வார் பராங்குசநாயகி என்றும், திருமங்கையாழ்வார் பரகாலநாயகி என்றும் வைணவ மரபில் போற்றப் பெறுகின்றனர். பிறருக்கு அடிமையாகாத தன்மை, பிறரைச் சரணுக அடையாத தன்மை, கூடியிருத்தலால் மனம் தரித்திருத்தல், பிரிவில் தரியாமை, அவன் நியமிப்பானுகவும் தான் நியமிக்கப்படுபவளாகவும் கொள்ளுதல் ஆகிய தன்மைகள் பிராட்டிக்கும் பக்தருக்கும் உண்டாகையால், ஆழ்வார் தம்மைப் பெண்ணுக எண்ணிப் பாடுவது பொருந்தும் என்பர். ஆழ்வார் தாமாக நின்று பாடுவது, (அக மரபில்) காதலில் தோழி-தலைவி-தாய் என்று பெண்ணுக நின்று பாடுவது என இரு பிரிவாகப் பாசுரங்கள் அமைகின்றன என்பதை 'ஞானத்தில் தன் பேச்சு பிரேமத்தில் பெண் பேச்சு' (ஆசார்ய ஹிருதயம் சூ. 118) என்று கூறும். உலகியல் காமம் போன்றது அன்று இக்காதல்; இது பகவத்காமம் என்றனர். இறைவனைக் கண்ணுல் கண்டு இட்டுந் தொட்டும் தழுவியும் முழுசிப் பரிமாறுவதான நிலையை மனத்திற்குள் அநுபவிப்பது கூடல் (புணர்ச்சி) ஆகிறது. கண்களால் காண வேண்டுமென்ற புற அனுபவம் கிட்டப் பெறுமை பிரிவு எனப்படுகிறது. பிரிவாற்றுது வாடிப் பாடுவது மிகுதியாக உள்ளது.

மூவகைக் கூற்றுநிலை உள்ளது. தாய், தலைவி, தோழி என்ற மூன்றும் பெண் பேச்சாக அமைந்துள்ளது. ஆழ்வார் தோழி, தலைவி, தாயாக மாறிப் பேசுகிருர். தலைவனையும் தலைவியையும் இணைக்கிச் சேர்ப்பவள் தோழி. இறைவனுடன் ஆன்மாவுக்குச் சொல்லப்பட்ட வேறென்றிற்கும் உரியதல்லாத அடிமைத்தன்மை முதலிய தொடர்பை-சம்பந்தத்தை-அறிதலே ஆன்மாவிற்கு ஏது. சம்பந்த ஞானம் (உறவு ஏற்படுத்தும் அறிவு) தோழி ஆகிறது. திருமந்திரத்தில் முதற்சொல்லான பிரணவத்தைக் குறிக்கும். தாயானவள் மகளைப் பெற்று வளர்த்துப் பருவமடைந்த பெண்பிள்ளை தலைவனிடம் கொண்ட அளவற்ற ஈடுபாட்டால் அவன் வராதபோது அவனிருக்குமிடத்திற்குப் போக வேண்டுமென்று பதறுமளவில், அவன் தானே வந்து வரைந்து கூட்டிப் போக வேண்டுமேயொழிய படிகடந்து போதல் குல மரபிற்கு ஏற்றது அன்று என்று கூறித் தலைவியைத் தடுக்கும் அறிவு நிலை ஆகும். சித்தோபாயம் என்கிற தலைவன், தானே வந்து ஆட்கொள்ள வேண்டும் என்று பதற்றமான தலைவியின் துடிப்பை அடக்கப் பார்க்கும் உபாயத்துணிவு - நெறியில் நம்பிக்கை உடைய அறிவுநிலை தாய் கூற்றாகும். திருமந்திரத்தில் நடுச்சொல் இது.

தலைவி, தலைவனிடம் கொண்ட அன்பு காரணமாகக் குல மரபுகளையும் நோக்காது அவனை அடையாமல் ஆற்றமாட்டேன் என்னும் பதற்றத்தை உடையவள். அவனுகிய பேற்றில் பதற்றம் ஆகிய அவளது அறிவுநிலை தலைவி கூற்றாகும். திருமந்திரத்தில் சுற்றுச்சொல் இது. இம்மூன்று நிலைகளும் எக்காலத்திலும் ஆழ்வார் உள்ளத்தில் உண்டு. அதனாலே இவை அறிவு நிலை (பிரஜ்ஞா அவஸ்தை) எனப்பட்டது. தலைவியின் பேதை முதலாகப் பேரிளம் பெண் ஈறுன ஏழு பருவங்கள், பக்தியின் முதல் நிலை முதல் இறுதி நிலை முடிய ஏழு நிலைகளாக உருவகிக்கப் பெறும் (பார்த்தவுடன் பிறக்கும் விருப்பம் 'அபிலாஷை' அது பற்றிய சிந்தனை, இடையறுது நடைபெறும் தொடர் நினைப்பு 'அனுஸ்மிருதி', எப்படியும் பெற்று நுகர விரும்பும் இச்சை, மாற்ற முடியாதபடி முதிரும் சுவை, பெறின் இன்பம் 'பரபத்தி', பிரிவின் துன்பம் 'பரமபத்தி' என்று இவை ஏழுநிலைகளாகும்.)

தலைவியின் உடல் உறுப்புக்களாகக் கூறப்படும் கூந்தல் விரிவை - மயில் என்பதாக உருவகிப்பது ஞான மலர்ச்சி என்பர். நெற்றிபிறை என்பது பிறருக்கு அடிமையாகாத தூய்மை(வெண்மை-ஒளி) ஆகும்; புருவம்-வில்-அகமும் புறமும் ஆய கரணங்களை அடக்கி ஆளுவது ஆகும்; கண்-அம்பு-இறைவனை நோக்கும் ஞானம்; வெண்முறுவல் - முத்து- இறைவனை அனுபவித்தால் வரும் ஆனந்தம் என்று இவ்வாறு விளக்குவர்.

சிறுசுளகு என்பது பெருமணலையும் நுண்மணலையும் பிரித்திடும் கருவி-

உடல், ஆன்மா வேறுவேறு எனப் பகுத்து அறியத் துணையான அளவை யைக் குறிக்கும். சீரார் சுளகு நெல் லையும் மணலையும் பிரிப்பது. ஆன்மா வேறு பரமான்மா வேறு என்று பகுத் தறிவதற்குத் துணையான அளவை என்பர். மாலைக்காலம் (தெளிவுற அறிய முடியாது மயக்கும் காலம்) ராஜச ஞானம்; கங்குல் (மாறுபாடா கத் தோன்றும் காலம்) தாமத ஞானம்; காலை (உள்ளபடித் தோற் றும் காலம்) சாத்விக ஞானம்; பகல் (தெளிவுற விளக்கிக் காட்டும் காலம்) சுத்த சத்துவ ஞானம் என்பர். நிலா முற்றம்-உயரத்தில் ஏறி எல்லாவற் றையும் காண அமைந்த இடம்-எல்லை நிலமான புருஷார்த்த ஞானம் என்ப தாகும். கலை, வளை என்பவை இறை வனை அனுபவிப்பதற்குத் தடையான யான், எனது என்னும் செருக்கு களாகும். இவை இரண்டையும் விட் டால்தான் அவன் அனுபவம் கிட்டும். பந்து, நூலால் கட்டப்படும் விளை யாட்டுக் கருவி; முக்குணங்களின் அடி யாக வரும் வினையால் அமைந்த உடல் பந்தாக உருவகிக்கப்படும். கழல்-இன்ப அனுபவத்திற்குரிய ஐம் பொறிகளாகும். யாழ், தென்றல், மதியம், அடிசில், சாந்தம் ஆகிய ஐந்தும் முறையே ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் ஆகிய ஐம்புல இன்பப் பொருள்களைக் குறிக்கும். தூதுவி டப்படும் அன்னம், வண்டு, தும்பி, கிளி, பூவை, நாரை, கொக்கு, முத லிய பறவைகள் உயிரை இறைவ னுடன் தொடர்புபடுத்தும் பணியைச் செய்யும் குரு முதலானவர்களைக் குறிக்கும். ஞானம், அனுட்டானம் ஆகிய இரண்டும் இரு சிறகுகளாகும். சேர்ப்பாரைப் பறவைகளாக அவர் தம் நிலைகளுக்கு ஏற்ப உருவகிப்பர்.

தமிழ் அகமரபிற்கு இப்பாடல் களில் கூறப்பெறும் கருத்துக்கள் இசைந்து வருகின்றன என்றபோதி லும் குறைத்து இப்பாசுரங்களை மதிப் பிட்டுவிடக்கூடாது என்பதற்காக ஆசாரிய ஹிருதயம் இவ்வாறு தத்துவ விளக்கம் தந்து விரித்துப் பேசு கின்றது. நம்பிள்ளை, பெரியவாச் சான்பிள்ளைபோன்ற உரைக்காரர்கள் பாசுரங்களை விளக்கியபோது, தமிழ் அகப்பொருட் செய்திகளை விளக் கினர். ஆசாரிய ஹிருதயம் விரி வாகத் தத்துவ விளக்கம் செய்தது.

திருமங்கையாழ்வார் பாடிய பாசு ரங்களில் மரபிற்கு ஏற்பவும் மாறி யும் வருவனவற்றிற்கு இத்தகு குறி யீட்டு விளக்கங்கள் கூறப்படாதது உணரத்தக்கது. தலைவி காதல் நோய் மிக்கு, தாய்ச்சொல்லைக் கேக்காமல் இருக்கிறாள். கட்டுவிச்சியிடம் தாய், வினவ, அவளும் கடல் வண்ணனே நோய் செய்தான் என்று கூறுகிறாள்.

''பட்டுடுக்கும் அயர்த் திரங்கும் பாவை போனாள்
பனிநெடுங்கண் ணீர்ததும்பப் பள்ளி கொள்ளாள்
எட்டனைப்போது எங்குடங்கால் இருக்க கில்லாள்
எம்பெருமான் திருவரங்கம் எங்கே என்னும் ?
மட்டுவிக்கி மணிவண்டு முரலும் கூந்தல்
மடமானை யிது செய்தார் தம்மை மெய்யே
கட்டுவிச்சி சொல்என்னச் சொன்னாள்; ' நங்காய்
கடல்வண்ணர் இது செய்தார் காப்பார் ஆரே ' ''

திருநெடுந். 11

இப்பாசுரத்தில் வரும் கட்டுவிச்சி கூற்று எஃபதற்குக் குறியீட்டு விளக்கம் பிற்றை நாளில் உயிரையும் (தலைவியையும்) தலைவனையும் சேர்க் கும் கட்டுவிச்சி ஞானாசிரியன் என்று விளக்கப்பட்டது. திருமங்கையாழ் வாரின் சிறிய திருமடலில் வரும் கட்டுவிச்சி கூற்றுக்குப் பெரியவாச் சான்பிள்ளை, ''ஆசார்யர்கள் தாங் களே வந்து சொல்லுவார்களிறே... ருசியுடையார் என்று தோன்றினவள விலே சொல்லுவர் எம்பெருமானர்; அப்படி காணும் இக்கட்டுவிச்சியும்'' (சிறிய திருமடல், பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானம், ப. 49) என்று கூறுவதில் இராமாநுஜர் போலத் தானே வந்து வழி சொல்லுகிறாள் இக்கட்டுவிச்சி என்பதால் இத்தகு தத்துவ விளக்கம் வந்தது என்று கொள்ளலாம்.

முடிவுரை :

உரையாசிரியர்கள் தம் இலக்கியக் கோட்பாடுகளுக்கு ஏற்ப அருளிச் செயல் அடிகளுக்குப் புதை நிலையில் ஆழ்ந்த தத்துவ விளக்கம் தரத் தலைப் பட்டனர். பின் வந்த ஆசார்ய ஹிரு தயம், நம்மாழ்வாரை வேதம் தமிழ் செய்த மாறனாகவும் அவர் அருளிய பாசுரங்களை உயர்ந்த தத்துவ விளக்க முடையவைகளாகவும் நிறுவ முற் பட்டது. அதன் விளைவாக அகப் பொருள் மரபுக்கூறுகள் ஒவ்வொன் றும் தத்துவ விளக்கம் பெற்றன. கவிதையின் கருவான செய்திக்கு ஒரு நாடகச் சூழல் அமைத்து அதனைப் பாடும் பாங்கு பழைய தமிழ் அக மரபை ஒட்டியது ஆகும்.

''பந்தோடு கழல் மருவாள்; பைங்கிளியும் பாலூட்டாள்; பாவை பேணாள்
வந்தானோ திருவரங்கன் வாரானோ என்றென்றே வளையும் சோரும்
சந்தோகன் பௌழியன்ஐந் தழலோம்பு தைத்திரியன் சாம வேதி
அந்தோவந் தென்மகளைச் செய்தனகள் அம்மனைமீர் அறிகி லேனே''

(பெரிய. திரு. 5.5.9)

இப்பாசுரத்தை அகத்துறையில் அமைந்த பாசுரம்-தலைமகள் பிரிவாற் றாமைத் துயர் கண்டு தாய் இரங்கு வது என்று கவிதையாக அனுபவிக் கும் திறன் முருகியல் அணுகுமுறை மிகப் பெரியது; சிறப்புடையது. அக மரபைப் பாசுரம் வழிவழிச் சீதன மாகப் போற்றி வந்துள்ளது கண்கூடு.



# அந்தர்யாமி

(அகிலபாரத ஸாது சங்கத்தின ரால் மதுரையில் நடைபெற்ற 138 ஆது மாத அகண்டநாமபஜனை (தொடர்ந்து 24 மணி நேரம் பஜனை யில்) நிறைவு பெறும் போது ஸாது சங்கத்தலைவர் ஸ்ரீலஸ்ரீ கிருஷ்ண பிரேமி அவர்கள் 1-2-1988 அன்று காலையில் ஆற்றிய உரையில் இருந்து தொகுக்கப் பெற்றது.)

அநந்த கோடி நாமரூப கல்யாண குணங்களையுடைய ஆதிபகவான் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரமென்ற முத்தொழில்களை நடத்துவதற்காவும் துஷ்ட சிக்ஷண சிஷ்ட ரக்ஷண காரியத்திற்காகவும் அதர்மத்தை நீக்கி தர்மத்தை நிலை நிறுத்துவதற்காகவும் பல உருவங்களில் அவதரிக்கிறான். அத்தகைய பகவானுடைய அவதார ரூபங்கள் பொதுவாக பரம், வ்யூஹம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்று பிரிக்கப்பட்டுள்ளது.

நித்ய ஸுரிகள், தேவர்கள், பரமரிஷிகள் போன்றோருக்கு பரம், வ்யூஹம், விபவம் என்ற அமைப்பில் அருள்பாலித்தாலும், நம்போன்றோருக்கு விக்ரஹ ரூபங்களான அர்ச்சாவதாரங்களும், எல்லோர் மனத்திலும் அந்தர்யாமியாக இருந்து கொண்டு பகவான் அருளாட்சிசெய்து வருகிறார்.

நம்மை உய்விக்க நம் பொருட்டு ஈஸ்வரன் தன்னை உலோகமாக மாற்றிக்கொண்டு, கல்லாக மாற்றிக் கொண்டு யார் என்ன செய்தாலும் சரி, தூக்ஷித்தாலும் சரி, எப்படியும் ஆன்மாக்களுக்கு உஜ்ஜீவனமாக உயர்த்த வேண்டும் என்று வைராக்கியமாக இருந்து வருகிறார்.

அந்தர்யாமி என்ற அமைப்பில் இன்னும் மேலாக உற்ற துணையாக உடன் வரும் நண்பனாக, சகாவாக, அருள்பாலித்து வருகிறான். வேதங்கள் சத்யமானவை. சிறப்பான கருத்துக்கள் சிலேடையாகத் தெரிவிக்கப்பட்டுள்ளன. உடல் என்னும் விருக்ஷம் இருக்கிறது. அதில் இரண்டு கிளிகள் உள்ளன. இரண்டும் ஒரே வடிவத்தில் ஒரே அமைப்பில் மங்கள ரூபமாக இருந்தாலும் ஒன்றை ஒன்று பார்த்துக் கொள்ளாமல் இருக்கின்றன. ஒன்று மிகப்பிரகாசமாக இருக்கிறது. அருளே வடிவமாக-காட்சியாக இருந்து வருகிறது. மற்றது பிரகாசம் குறைந்த நிலையில் மரத்தில் இருக்கும்பழத்தை கொத்திக்கொத்தித் தின்று வருகிறது.

கருணையே வடிவமான, அருள் வள்ளலான பரம்பொருள் அங்கு பரமாத்மாவாக நம்மை உய்விக்க காத்துக் கொண்டு இருக்கிறது. ஆனால் நாம் அருகில் இருக்கும் பரம்பொருளைக் காணாது புலன் இன்பங்களிலேயே அனுபவிக்க ஆயத்தமாக, நாட்டமாக ஆவலாக இருந்து வருகிறோம். இதைத்தான் வேதம் விருக்ஷத்தில் ஒரு கிளி அருள்வடிவமாக பிரகாசமாக இருந்து வருகிறது. இந்திரிய விஷயங்களுக்கு அப்பாற்பட்டது. ஜீவாத்மாக்களைக் குறிக்கும் கிளியானது அருகில் இருக்கும் கிளியைக் கவனியாது மரத்தில் இருக்கும் பழங்களை ருசிப்பதிலேயே கவனத்தைச் செலுத்தி வருகிறது. இந்திரிய விஷயங்களில் உழண்டுவருபவர்களுக்குப் பசி, பிணி, மூப்பு ஆகியவைதொடர்கின்றன என்பதைக் காட்ட பிரகாசம் குறைந்த நிலையில் கிளி இருப்பதாக உவமானிக்கப்படுகிறது.

உவமானத்தில் இரண்டும் கிளி என்று வித்யாசம் காட்டாது இருப்பதுடன் அருகில் இருக்கிறது என்பதால் ஜீவாத்மாக்களும் பரம் பொருளை அடையலாம் என்பதாகிறது. அருகில் இருப்பதால் பரம் பொருளை அடைய சிரமம் இல்லை. புலன் ஆசையை அதாவது விட வேண்டியது எல்லாம் விட்டுவிட்டால் எளிதில் அடையலாம் என்று காட்டுகிறது. இதைத்தான் கீதாச்சாரியன் சரம ஸ்லோகத்தில் எடுத்துரைக்கிறார். கீதையின் சாரமே சரம ஸ்லோகம்தான்.

ஒருகிளிதான் பழத்தை ருசித்தபடி அருகில் இருக்கும் கிளியைப் பார்க்காத வண்ணம் இருக்கிறதே, தன்னைப் பார்க்கவில்லை என்று மற்றொரு கிளி ஏன் பறக்காமல் அங்கேயே இருக்கிறது! காலம் காலமாய் ஏன் காத்திருக்கிறது? என்ற சந்தேகம் வரும்.

---


**திரு. சோ. ரங்கசுவாமி**
*நாட்டரசன்கோட்டை*


---

உற்ற நண்பர் எப்படி ஒருவனை காப்பாற்றுவானோ அதே போல நாம் கூடவே இருந்தால் நம்மை எப்படியும் திரும்பிப்பார்ப்பான் என்று பொறுமையாக பகவான் இருந்து வருகிறார். நாம் எங்குச் சென்றாலும் அவனும் கூடவே வருகிறான். நாம் ஏதேனும் தப்பு செய்தால் உற்ற நண்பன் இடித்துக் காண்பிப்பது போல தவறு செய்யும் போது மனச்சாட்சியாக உறுத்தி வருகிறான்.

"மனச்சாட்சிக்கு விரோதம் இல்லாமல் காரியத்தைச் செய்" என்று பாமரமக்கள் அந்தர்யாமியாக இருக்கும் இறைவனைத்தான் 'மனச்சாட்சி' என்று சொல்லி வருகிறார்கள். நாஸ்திகர்கள் கூட 'மனச்சாட்சி' என்ற அமைப்பில் அந்தர்யாமியாக இருக்கும் இறைவனைத்தான் சிந்தித்து வருகிறார்கள்.

உற்ற துணையாக, உற்ற நண்பனாக அந்தர்யாமியாக இருக்கும் இறை

# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | ரூ. காசு. |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. நித்யாநுஸந்தானம் (வடகலே) | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலே) | 4—50 |
| 8. சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. கண்ணன் பேசுகிறுன் —நஜன் | 0—50 |
| 10. சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. ப்ரஸ்ளுேபநிஷத் | 11—00 |
| 7. ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. ஸீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செய லாட்சித் தலேவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

என்ற 'அஸ்தம்' ஆகும். பிறகு பத்து பத்துநாட்கள் சென்ருல் திருவோணம் ரோகிணி வரும் மீண்டும் பத்து நாள் எண்ணிஞல், 'அத்தம்' திரும்ப வரும்.

அஸ்த நட்சத்திரத்தை மையமாக வைத்துப்பாடிய தன் உன்னத நோக் கத்தை மேலும் ஆராய்ச்சி செய்து பார்ப்போம். இந்த ஆராய்ச்சியின் மூலம் ஆழ்வார் திருநட்சத்திரத்தை மையமாக வைத்துப் பாடியதன் அர்த்தம் புரியும்.

அத்தம் என்று முதலில் கூறிவிட் டார். அதன் கணக்கில் திருவோணம்-ரோஹிணி - திருநட்சத்திரங்கள் தெரிந்தன. இந்த மூன்று திருநட் சத்திரங்களுக்கும் உரிய இராசியைச் சற்று பார்க்கலாம்.

ரிஷப இராசியில் - கார்த்திகை $\frac{3}{4}$, 'ரோகிணி', மிருக சிரீடம் $\frac{1}{4}$.

கன்னி இராசியில் உத்திரம் $\frac{3}{4}$, 'அஸ்தம்', சித்திரை $\frac{1}{4}$.

மகர இராசியில் உத்திராடம் $\frac{3}{4}$, 'திருவோணம்', அவிட்டம் $\frac{1}{4}$.

என்று இராசிக்குரிய நட்சத்திர நிலே களே அறியலாம். இராசிக்கு உரிய மூன்று நட்சத்திரங்களில் மையமாக வரும் பூரண நட்சத்திரங்களே எடுத் துக்காட்டிய அற்புதத்தை எண்ணிப் பாருங்கள்.

ரிஷப இராசியை, இரண்டு என்ற குடும்ப ஸ்தானமாகவும், கன்னி இராசியை ஆறு என்ற நோய்-கடன்-கவலே என்ற ஸ்தானமாகவும், மகர ராசியை பத்து என்ற ஜீவன ஸ்தா னமாகவும் - ஜ்யோதிஷ சாஸ்திரத் தில் இராசி மண்டல நிலேகளே விளக்கி இருப்பார்கள்.

நமது குடும்பம் நன்ருக அமைய, இரண்டாம் இடத்தை எடுத்துக் காட்டி, அதற்குரிய ஒரு திருநட்சத் திரத்தையும் சொல்லி நமக்கு எப் போதும் நோய்-கடன்-கவலே இருக்கக் கூடாது என்பதற்காக ஆறும்

(36-ம் பக்கம் பார்க்க)

# வடகலை - தென்கலை - ஒரு கண்ணோட்டம்

முன்னுரை :

மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து துன்பக்கடலுள் துவள்கின்ற நம் போன்றவர்களுக்கு நன்னிலை அடைந்து வீடு பேறு பெறுவதற்குத் தெரிந்து கொள்ள வேண்டிய நூல்கள் பலப்பலவாகும். சமயம் சார்ந்த நூல்கள் சாத்திரங்களும், தோத்திரங்களும் ஆகும். பல்வேறு சமயங்கள் பல்வேறு ஒழுக்கங்களை, வழிமுறைகளை வகுத்து இதுதான் வீடு பேற்றுக்கு வழி என அவ்வச் சமயங்கள் விரித்துக் கூறும்.

நமது வைஷ்ணவ சமயத்தில் பதினெட்டுச் சாத்திரங்களும் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் மற்றும் பல தோத்திர நூல்களும் ஏராளமாக உள்ளன. அவற்றை எல்லாம் கற்றுத் தெளிய காலமும், புலமையும் வேண்டற்பாலது. துன்பம் கலவாத இன்பத்தை அளிப்பது சாத்திர நூல்களும் தோத்திர நூல்களுமே. இந் நூல்களுக்குப் பல சான்றோர்கள் பல வகை விரிவுரைகளையும் வகுத்துத் தந்துள்ளார்கள். அவர்களது அறிவுக்குத் தலைவணங்க வேண்டும். முழுமையும் கற்க வாய்ப்பில்லாதவர்கள் 1) ஸ்ரீவசனபூஷணம் 2) தத்வத்ரயம் 3) முமுட்சுப்படி 4) ஆச்சார்யஹ்ருதயம் ஆகிய இந்நான்கு நூல்களையேனும் படித்துப் பயன் பெறுவது வைணவர்களாகப் பிறந்த ஒவ்வொருவரும் அடையத்தக்க பேறாகும்.

ஸ்ரீ ராமானுஜ தர்சனம் என்பது வைணவத்தின் பரந்துபட்ட அறிவினைத் தொகுத்துத் தந்த பெருமையுடையது. வேதம், ஆழ்வார்களின் அருளிச்செயல்கள், ஆச்சாரியர்களின் விரிவுரைகள், அனைத்தும் திருவுறை மார்பனுகிய திருமாலை வழிபட்டு பிரபத்தியுடன் அவனது திருவடிப் பேற்றினைப் பெற வழிகாட்டும் ஒளிவிளக்காகும். பிற்காலத்தில் வழிபாட்டு முறைகளிலும் தத்துவக் கருத்துக்களிலும் ஒரு சிறிது வேறுபாடு காணப்பட்டது. வடகலை - தென்கலை எனப் பிரிவு ஏற்பட்டது. வடகலைக்கும் தென்கலைக்கும் தத்துவங்களிலோ வழிபாட்டு முறைகளிலோ, உண்மையை உணர்வதிலோ வேறுபாடு கிடையாது. பதினெட்டு விஷயங்களில் இறைவனையும், இறைவியாம் திருத்தாயாரையும் பற்றியனவும் ஒரு சில வேறுபாடுகளைத் தவிர எந்தவித மாறுபாடும் கிடையாது.

வடகலை—ஆச்சாரியர் ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிசன்
தென்கலை—ஆச்சார்யர் ஸ்ரீ மணவாள மாமுனிகள்

இருவருமே ஏற்றுக்கொண்ட மிக உன்னதமான மாறுபாடும், வேறுபாடும் அற்ற கருத்துக்கள் பலவாகும்.

**அவசியம் அறிய வேண்டியவை :**

ஒன்று: தத்வத்ரயம் (அ) சித்து - உயிர் அல்லது ஆன்மா, சேதநன், அறிவுடைப் பொருள். (ஆ) அசித்து- அறிவற்றது, ஜடம், அசேதநம், (இ) ஈஸ்வரன் — இறைவன், ஞானமயன், அந்தர்யாமி, பரப்பிரம்மம். இம் மூன்று பொருளையும் விளக்குவது இந்நூல்.

இரண்டு : முமுட்சுப்படி. மோட்சத்தில் இச்சையுள்ளவன் அறிய வேண்டிய முப்பொருள் உண்மை.
(அ) திருமந்திரம், திருவஷ்டாக்ஷரம் திருவெட்டெழுத்து, மந்திரராஜம் எனப்படும்.

(ஆ) த்வயம் — இரு வாக்கியங்கள். மந்திர ரத்தினம்.

(இ) சரமச்லோகம்: கீதையில் கூறப்பட்ட ஒரு செய்யுள்.

மூன்று : ஸ்ரீவசன பூஷணம்-சிறந்த வசனங்களை நிறைத்துச் செய்யப்பட்டது. இந்நூல் நான்கு பிரகரணங்களாக (பிரிவுகள்) வகுக்கப்பட்டுள்ளது.

நான்கு : ஆச்சார்யஹ்ருதயம் : திருவாய்மொழியாம் பகவத் விஷயத்தைப்பற்றிய பரந்து பட்ட நுணுக்கங்களையும் நம்மாழ்வாரின் திருவுள்ளக் கிடக்கையையும் நன்கு உணர்த்துவது. நம்மாழ்வாரே இங்கு ஆச்சாரியார். இந்நூலின் பெருமை சொல்லும் தரமன்று.

மேல்குறிப்பிட்ட நான்கு நூல்களையும், தெளிவுறக்கற்பதற்கு இறைவன் நமக்குநற்புலமைஅளித்தல்வேண்டும். அதற்கு பாகவதர்களின் சேர்க்கை இன்றியமையாதது. இனி வடகலை தென்கலை வேறுபாடு கீழே காணலாம்.

**வித்வான் ந. கி. நாராயணராஜா**
*இராஜபாளையம்.*

தென்கலை

இறையருள் தானே பெருக்கெடுப்பதாகும்.

இறையருளினால் இறைவனும் உயிரும் பயனடைகின்றன. இறையருளில் பல நிலைகளும் உள்ளன.

இறைவனை அணுகுவதற்கு கடமை, பத்தி, பிரபத்தி, ஆசார்ய அபிமானம் ஆகிய அனைத்தும் தேவையாகும்.

இலக்குமியும் உயிரைப் போன்றவளே.

இலக்குமி உயிர்க்கு வீடுபேறு நல்க வேண்டி இறைவனிடம் பரிந்துரைப்பவள்.

இறை அன்பு பத்தனின் தவறுகளைத் திருத்துவது.

இறைவனின் தயவு உயிர் துன்புறுவதைக் கண்டு தானும் துன்புறுவதாகும்.

பிரபத்தி பத்தனின் இறை உயிர் பற்றிய அறிவில் அடங்கியது.

பிரபத்தி நெறிநிற்கும் பிரபன்னநிலை பிரபந்தங்களை மட்டும் கற்றுத் தெரிவது.

பிரபன்னர்கள் உலகியல் கடமைகளைச் செய்யவேண்டியதில்லை.

பிரபத்தியுடன் அறிவு வினை நெறிகள் முரண்பட்டவை அல்ல.

உலக நலன் பொருட்டு கடமைகளைச் செய்வது பிரபன்னரின் விருப்பத்தின் பாற்பட்டதாகும்.

பிரபத்தியின் கூறுகள் அனைத்தும் கடைப்பிடிக்காமல் இருக்கலாம்.

வீடுபேற்றுக்கு இறைவனே காரணம்.

பிரப்ன்னன் தனது தீயசெயல்களுக்குக் கழுவாய் தேடுவது பயனற்றது.

இறை உயிர் தொடர்பு அகவயமானது.

வீடுபேறு அடைந்தோர் நிலைத்திருப்பவர்.

வடகலை

இறையருள் பெருக்கெடுப்பது உயிரை ஓரளவு சார்ந்ததாகும்.

இறையருளினால் பயனடைவது உயிர் மட்டுமேயாகும். இறை அருளில் ஒரே நிலை மட்டும் உண்டு.

இறைவனை அணுக பத்தியும் பிரபத்தியும் போதுமானவை ஆகும்.

இலக்குமி இறைவனைப் போன்றவள். இலக்குமி தானே வீடுபேற்றை அளிக்கவல்லவள்

இறை அன்பு பத்தனின் தவறுகளை ஒதுக்குகின்றது.

இறைவனின் தயவு உயிரின் துன்பத்தை நீக்கும்.

பிரபத்தி உயிர் தன்னை இறைவனிடம் ஒப்படைப்பது ஆகும்.

பிரபத்தி நெறி நிற்கும் பிரபன்ன நிலை. வேறு வழி எதுவும் இன்றி இறைவனைப் புகலடைவது.

பிரபன்னர் உலகியல் கடமைகளைச் செய்யவேண்டும்.

பிரபத்தி நெறிக்கு ஏனையவை முரண்பட்டவையாகும்.

உலக நலன் பொருட்டுச் செய்யப்படும் கடமைகள்கூட இறைவனை மகிழ்விப்பதற்கு இன்றியமையாதனவாகும்.

பிரபத்திக்கூறுகள் அனைத்தும் கடைப்பிடித்தல் கடமையாகும்.

வீடுபேற்றுக்கு பிரபத்தியே காரணம்.

கழுவாய் தேடுவது இன்றியமையாதது.

இறை உயிர் தொடர்பு புறவயமானது.

வீடு பேறு அடைந்தோர் வைகுந்தத்தைச் சென்றடைவர்.

இவ்வேறுபாடுகளைப் பிற வகைகளிலும் கூறுவது உண்டு. வடகலையினரும், தென்கலையினரும் இவ்வாறு தத்தம் கொள்கைகளில் வேறுபட்டிருப்பினும் வேதாந்த தேசிகனுடைய உரையை இருவகையினரும் பிறசமய மரபினர் வைணவத்தைத் தாழ்த்தும் போது வாதிட்டு வெல்வதற்காக ஏற்றுக்கொள்வர். வடகலையினர் அகோபில மடத்தின் மூலமும், தென்கலையினர் ஜீயர் மடத்தின் மூலமும் இன்றளவும் திருமால் நெறியைப் பரப்பியும் காத்தும் வருகின்றனர்.

தென்கலையார்

தமிழ் வேதமாம் நாலாயிர திவ்வியப் பிரபந்தப்படியே நடப்போர் ஹரிபாத கிருதியே திருக்காப்பெனத் திருமண் காப்பணிவார் பரமபத நாதனுகிய உன் சேவடி செவ்வி திருக்காப்பெனக் கொள்வார் பரமபத நாதனுகிய திருமாலடியே இராமானுஜனுகவும், இராமானுஜனது திருவடியே மணவாளமா முனியாகவும், மணவாள மாமுனிகளது திருவடியே அடியார்களது திருவடியாகவும் நினைத்துத் திருவடிக்குறியாகத் திருமண் காப்பணிவார். முண்டனம் செய்து கொள்ளார். மணவாள மாமுனிகளையே பெரிதும் வழிபடுவார்கள்.

வடகலையார் :

முநித்திரயம், மடம் என இரு திறப்படுவர். இந்தப் பேதம் தோழப்பர் என்னும் ஆசார்யர் காலத்தில் உண்டாயிற்று. இவர்களுக்கு வஸ்து பேதம் கிடையாது. சம்பிரதாய பேதம், சில விரதங்களில் பேதம், திருமண் இடுதலில் பேதம் உண்டு. முண்டனம் செய்து கொள்வர். வேதாந்த தேசிகரையே பெரிதும் வழிபடுவார்கள்.

ஸ்ரீ பாஷ்யகாரர் வரையில் தென்ஞசாரிய சம்பிரதாயத்தையொட்டிருந்தது. அவருக்குப் பிறகு இரண்டு மடமும் பரம்பரைகளால் பேதப்படுகிறது.

முடிவுரை :

பிரபத்தி நெறியில் மனித முயற்சியும் வேண்டற்பாலது என்று கூறுவது வடகலைச் சம்பிரதாயம். இது மற்கட நியாயம் (குரங்குக் குட்டித் தன் முயற்சியால் தாய்க் குரங்கைப்பற்றிக் கொள்வது). பிரபத்தி நெறியில் அனைத்தும் இறைவனையே சார்ந்தது என்பர் தென்கலையார். இது மார்ஜால நியாயம் (தாய்ப்பூனை தனது குட்டியைக் கவ்விச் செல்வது, குட்டிப் பூனையின் முயற்சி ஏதும் இல்லாதது)

இறைநிலை, உயர் நிலை, நெறி, அதன் தடை மற்றும் வினைகள் பற்றி (அர்த்த பஞ்சகம்) தெரிதல் ஆகிய ஐவகை அறிவு இருநெறியாருக்கும் பொதுவாகும்.





## சிறுவர் பகுதி

# குரு பரம்பரை

உலகங்கள் இறைவனால் படைக்கப்பட்டன. இவ்வுலகங்களில் உறையும் ஆன்மாக்கள் அனைத்தையும் படைத்தவரும் இறைவரே ஆவார். இறைவனும் அநாதி. ஆன்மாக்களும் அநாதி. ஆதிமுதல்வனான இறைவன் எழுந்தருளியிருப்பது பரலோகத்தில். பரலோகத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனே பரப்பிரம்மம் எனப்படுகிறார். பரப்பிரம்மம் ஒன்றே! ஒன்றே பலவாக நிற்கும் இயல்பு இறைவனுக்கு உண்டு. பலவாய்ப் பரந்து நிற்கும் இறைவனை அவரவர் அறிவுக்கேற்பச் சிவன் என்றும், விஷ்ணு என்றும் பலவாறாக உலகோர் பகர்வர்.

பரலோகத்தில் பரமன்பால் நீங்காத தொடர்பு கொண்டு பேரின்பத்தில் மூழ்கித்திளைக்கும் முத்தர்கள் உள்ளனர். நித்திய சூரிகளாய்ப் பரமனுடனேயே வாழும் பேறு பெற்றவர்கள் பாக்கியவான்கள்.

ஆனால், இவ்வுலகத்தில் உள்ளோரோ சிற்றின்பத்திலேயே நாட்டங் கொண்டு அறியாமை இருளில் மூழ்கி நரகத்துன்பத்தையேஅனுபவிப்பவர்களாகவே உள்ளனர்.

அப்படியானால் இவ்வுலகில் வாழ்பவர்கள் இப்பிறவியிலேயே பேரின்பத்தை அடைய முடியாதா? மண்ணுலகில் வாழ்வோர் மாறாத பேரின்பத்தை நுகர்தல் வேண்டும் என்ற எண்ணம் இறைவனுக்குக் கிடையாதா?

முத்தர்களைப்போலவே மண்ணுளாரும் பேரின்பத்தை நுகரவேண்டும் என்பதற்காகத்தான் தநு, கரண, புவன போகங்களைப் படைப்புக் காலத்தில் இறைவன் உயிர்களுக்கு அளித்தார்.

ஆனால், உயிர்களோ அவற்றைத் தீய வழியில் செலுத்தலாயின. மாய வலையில் மாட்டிக்கொண்டன. மனம் மயங்கித் திரியலாயின. விட்டில் பூச்சிகளைப்போலத் தங்களைத் தாங்களே அழித்துக் கொண்டன. கானல் நீரை உண்மையென்று கருதி மயங்கும் கயமை கொண்டன. மாய உலகை உண்மையென்று கருதி மயங்கலாயின.

மயங்கும் உயிர்களின் அறியாமையைப் போக்க ஆண்டவன் திருவுள்ளங்கொண்டார். அழிவில்லாத பேரின்பத்தை அடையும் உபாயத்தை உயிர்களுக்கு உபதேசிக்கத் திருவுளங் கொண்டார். எனவே, பகுத்தறிவை மக்களினத்துக்கு மட்டும் அருளலானார்.

நன்மை, தீமைகளை உயிர்கள் உணர்ந்து கொள்ளும் பொருட்டு முதலில் வேதத்தை அருளினார். ஆண்டவனின் கட்டளைச் சொற்களே வேதங்கள் எனப்படுகின்றன. வேதங்கள் அரியவை; பெரியவை. வேதங்களை உணரும் ஆற்றல் எல்லோருக்கும் இருக்க முடியாது. முற்றும் துறந்த முனிவர்களாலேயே வேதங்களைப் புரிந்து கொள்ள முடியும் என்று இறைவன் திருவுளங் கொண்டார்.

எனவே, முனிவர்கட்கே வேதங்களை இறைவன் முதலில் மொழிந்தார். அம்முனிவர்கள் வாயிலாக மண்ணுலகில் வாழும் சாமானிய மக்கட்கு வேதங்களின் உட்பொருளை வெளிப்படுத்தத் திருவுளங் கொண்டார்.

வேதங்கள் இறைவனின் திருவாக்கு என்பதும், நம்போன்ற சாதாரண மக்கட்காகவே ரிஷிகளின் வாயிலாக வேதங்கள் வெளிப்பட்டன என்பதும் இதனால் அறிகிறோம்.

அறியாமை இருளில் ஆழ்ந்த மக்களுக்கு வேத சாத்திரங்கள் ஒளி விளக்காகத் திகழ்ந்தன. வேதங்களால் பக்தி விளைந்தது. பக்தியானது மனமென்னும் உட்கண்ணின் இருளை அகற்றியது. அப்பக்தி நெறியினையும் மக்களுள் சிலரே அறிந்தனர். பெரும்பாலோர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலத்தால் அல்லலுற்றனர். எனவே, மக்களின் மலங்களை ஒடுக்க வேண்டிய பணியை விமலன் மேற்கொள்ளலானார்.

மக்கட்குப் பக்தி நெறியினை உணர்த்தலே தக்க செயலாக மேற்கொண்டார். உயிர்கட்கு இம்முறையில் அருள்புரிய இறைவன் தன்நிலையிலிருந்தும் எளிவந்த நிலைக்கு இரங்கி வந்தார். ஆண்டவன் ஆசார்யனாய் மாறலானார். உயிர்கட்கு அருளுபதேசம் செய்யக் கருதித் தானே ஆசார்யனாய் அமர்ந்த ஆண்டவனின் சௌலப்ய குணத்தை என்னென்பது.

கல்லால மரத்தின் கீழமர்ந்து, தட்சிணா மூர்த்தி கோலத்துடன் சனகர் முதலான முனிவர் நால்வர்க்கும் வேதோபதேசம் செய்தருளினார்.

தேர்மேல் ஏறிப் பார்த்தனுக்குச் சாரதியாய் அமர்ந்து கீதோபதேசம் செய்தருளினார்.

ஆறுமுகனாய் அவதாரம் செய்து அகத்தியர், அருணகிரி முதலானோர்க்குப் பிரணவத்தின் உட்பொருளை உபதேசித்தருளினார்.

இறைவன் இவ்வாறு வடிவங்கள் பல கொண்டு தானே ஆசார்யனானார். எனவே, இறைவன்தான் உலகின் முதல் ஆசார்யன்.

தெய்வத்திருமேனியுடன் ஆசார்யனாய் அமர்ந்த ஆண்டவன் நமக்காக மானிட வடிவமும் தாங்கலானார். பூருவாச்சார்யர், ஆழ்வார் முதலானோர் நம்போன்று மானிட உடலைப் பெற்றிருந்தனர். ஆனாலும் அவர்களெல்லாம் தெய்வத்தின் அம்சமே என்பதைத் தெளிந்தவரே உணர முடியும்.

திருமதி. கிருஷ்ணா
நாயகன்பேட்டை

ஆசார்ய பரம்பரை—அதாவது குரு பரம்பரை தோன்றிய விதம் இப்படித்தான்!

ஆசார்ய பரம்பரை சிவனையும், விஷ்ணுவையும், முருகனையும் முதல்வர்களாகக் கொண்டு தொடங்கியது. பின்னர், ஆச்சார்யர், ஆழ்வார்கள் என வளர்ந்தது.

சங்கரர், இராமானுசர், மத்துவர் முதலான எண்ணில்லாத ஆச்சார்யர் தோன்றியவண்ணம் இருந்தனர். இவர்களைப் பின்பற்றி இன்று வரை ஆச்சார்ய பரம்பரை வளர்ந்து கொண்டே வருகிறது. இச்சிறப்பு நம் இந்து சமயத்துக்கு மட்டுமே உள்ள தனிச்சிறப்பாகும். இறைவனையே குருவாகக் கொண்ட பெருமை இந்து சமயத்துக்குமட்டுமே உரியது.

ஆண்டவனே ஆசார்யரானார். எனவே ஆண்டவன் வேறு ஆசார்யர் வேறு என்று எண்ணுதல் கூடாது. ஆண்டவனும் ஆச்சார்யரும் ஒருவரே! ஆண்டவனின் அருள் வடிவமே ஆச்சார்யர்!

ஆச்சார்யர் என்னும் சொல்லுக்கு ஒழுக்கத்தின் தலைவர் என்று பொருள் கொள்ளலாம். எனவே, ஒழுக்கத்திலிருந்து ஒரு சிறிதும் தவறாதவரே ஆச்சார்யர் எனும் தகுதிக்குரியவர்.

குரு, உபாத்யாயர், ஆசிரியர் முதலான சொற்கள் ஒரே பொருளைத் தரும். குரு: பாபத்தை அழிப்பவர்.

உபாத்யாயர்: ஞானக் கல்வியைப் பெறுவதற்கு அருகில் இருந்து அருள்பவர்.

ஆசிரியர்: குற்றங்களை நீக்குபவர்.

ஆச்சார்யரைக் குறிக்கும் இச்சொற்கள் அனைத்தும் அறியாமையை அகற்றுபவர் என்னும் பொருளினைப் பயந்து நிற்றலைக் காணலாம்.

அஞ்ஞான இருளை ஞான ஒளியால் நீக்குபவர் ஆசிரியரே என்பதைத் தெளிவாக உணர முடிகிறது.

"அக்ஞான திமராந்தஸ்ய ஞானாஞ்சன் ஸலாகயா
சக்ஷுருன்மீலிதம்யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம:

என்னும் சுலோகமும் இப்பொருளையே தருதலைக் காணலாம்,

பத்து மாதம் சுமந்து பெற்றெடுக்கும் தாய் பசிப்பிணியைப் போக்குகிறாள். தந்தை நமக்குச் செல்வத்தைச் சேர்த்துவைக்கிறார். ஆனால், ஆச்சார்யரோ அறியாமைப் பிணியை அகற்றுகிறார். அத்துடன் ஆண்டவனையும் நமக்குக் காட்டி அருள்புரிகிறார்.

'இவர்தான் தந்தை' என்று நமக்குச் சுட்டிக்காட்டுபவள் தாய். தந்தை நம்மைக் குருவிடம் அழைத்துச் சென்று 'இவர்தான் குரு' என்று சுட்டிக்காட்டுகிறார். குருவோ நாம் பேரின்பம் அடைதற்குரிய நெறியில் நம்மை அழைத்துச் சென்று 'இவர்தான் கடவுள்' என்று சுட்டிக் காட்டுகிறார்.

எனவேதான் 'மாதா பிதா குரு தெய்வம்' என்று ஔவைபிராட்டியார் வரிசைப்படுத்திக் கூறுகிறார்.

பிரம்மா, விஷ்ணு, மகேஸ்வரர் எனப்படும் அனைத்துமாகவும் உள்ளவர் குரு ஒருவரே! எனவே குருவை வணங்கினால் எல்லாத் தெய்வங்களையும் வணங்கியதற்குச் சமமாகிவிடுகிறது.

"குருர் பிரம்மா குருர்விஷ்ணு குருர் தேவோ மஹேஸ்வர:
குருர் சாக்ஷாத் பரப்பிரும்மா தஸ்மை ஸ்ரீ குரவே நம:|

அனைத்துமாகவும் உள்ளவர் ஆச்சார்யர் ஒருவரே என்பதை அழகுற விளக்கும் தமிழ்ப் பாடல் ஒன்றினையும் காண்போம்:

"தந்தையாய் ஆவானும் சார்கதியிங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும்— எந்தமுயிர்
தானாகு வானும் சரணாகு வானுமருட்
கோனாகு வானும் குரு.

குருவின் இன்றியமையாமையைக் கருதியே பண்டைக் கால அரசாட்சியில் குருவுக்குச் சிறப்பானதோர் இடம் தந்தனர், 'அரச குரு' என்னும் பதவிக்கு அரசனும் தலை வணங்கினான்.

கடவுளின் அவதாரங்களான இராமபிரானும் கண்ணனும் கூடத் தங்கள் குருவை வணங்கி வந்தார்கள் என்ற வரலாறும் உண்டு,

குரு தரிசனம் கோடி புண்ணியம்! குருவைத் தரிசிப்பதால்தேவர்மூவரை வழிபட்டதன் பலன் கிடைக்கும், கங்கை காவிரியில் மூழ்கிய புண்ணியம் சேரும். தலங்கள் பலவற்றைத் தரிசித்ததன் பேறு கிடைக்கும். தான தருமங்கள் செய்ததன் பயன்கிட்டும். ஏகாதசி, சோமவாரம் முதலான விரதங்களின்பலன் தானே வந்து சேரும். யாகங்கள் பலவற்றைச் செய்ததால் உண்டான புகழ் வந்து குவியும். கும்பாபிடேகம், தேர்த்திருவிழா முதலியவற்றைக் கண்ட காட்சிக்கு நிகராகும், வினைகள் வெந்தொழியும், பாவங்கள் தானே அகலும்.

குரு தரிசனம் கிடைக்கப்பெறுதவர் என்ன செய்வது?

குருவைத் தம் மனத்தால் நினைத்தலும், அவர் திருநாமத்தை உச்சரித்தலும் போதும்!

குருத்துரோகம் செய்தவனை இறைவன் எந்நாளும் மன்னிக்கமாட்டான். தெய்வநிந்தனை செய்துவிட்டால் அதனைப் போக்கும் ஆற்றல் குருவுக்கு உண்டு. ஆனால் குருநிந்தனை செய்துவிட்டாலோ அப்பாவத்தைப் போக்க இறைவனாலும் ஆகாது எனவே குருவுக்கு நிகர் குருவே.

ஆச்சார்யரை மதிக்காத எந்த மனிதனும் அந்தமில் இன்பத்தை அடையமாட்டான். குருவின் மகிமையே மகிமை! குருபரம்பரையினரைத் தரிசித்து, குருவின் வழி நின்று, குருவின் ஆசிபெறும் தகுதி உடையதாக உலகம் விளங்குவதாக! குருவருளால் திருவருள் நிறைவதாக!

குருவே சரணம்!

# வியாஸ பகவானுக்கு ஒரு கோவில்



ஒரு சமயம், பரமசிவன் பராஸருக்கு ஒரு வரம் அளித்தார். அதன் படி 'பராசரருடைய குமாரர் சிரஞ்சீவித்வம் பெற்று உலக மக்கள் உய்யும் பொருட்டு வேதங்களைத் தொகுத்து மக்களுக்கு அளிப்பார்' என்பதாகும்.

காலக்ரமத்தில் சத்யவதிக்கும், பராஸ்ரருக்கும் க்ருஷ்ண த்வைபாயனர் பிள்ளையாக அவதரித்தார். இவர் தன்னுடைய தகப்பனுராகிய பராசரரிடத்திலும், சௌனகமுனி வழியில் வந்த பதஞ்சலியிடத்திலும் வேதங்களைக் கற்று நல்ல பாண்டித்யம் பெற்ருர்.

க்ருஷ்ண த்வைபாயனர் நாடு முழுவதும் சென்று வேதங்களைச் சேகரித்தார். அவற்றை நான்கு ஸம்ஹிதைகளாகப் பிரித்தார். இவற்றைத் தன்னுடைய முக்கிய நான்கு சீடர்களுக்குக் கற்றுவித்தார். ரிக் வேதத்தை பைல முனிவருக்கும், யஜுர் வேதத்தை வைஸம்பாயனருக்கும், ஸாம வேதத்தை ஜெய்முனி முனிவருக்கும், அதர்வண வேதத்தை சுமந்து முனிவருக்கும் கற்றுவித்தார். இதனுல் இவருக்கு 'வேத வியாஸர்' (வேதத்தைப் பிரித்தவர்) என்ற பெயர் ஏற்பட்டது.

மற்ருெரு சிஷ்யரான ரோமஹர்ஷனருக்கு புராணங்களை (18 பெரிய புராணங்கள், 18 சிறிய புராணங்கள்) கற்றுவித்தார். இவரை சூத புராணீகர் என்றும் அழைத்தார்கள். இந்த சூத புராணீகர் தம் ஆஸ்ரமத்தை நைமிசாரண்யத்தில் அமர்த்திக் கொண்டு மற்ற ரிஷிகளுக்கும், முனிவர்களுக்கும் இப்புராணங்களைக் கற்றுவித்தார். ஏழு சிரஞ்சீவிகளில் ஒருவரான வேத வியாஸர் பத்ரியில் தமது ஆஸ்ரமத்தை ஏற்படுத்திஞர்.

திரு. சி. ஆர். திருவேங்கடத்தான்,
ஸ்ரீ ரங்கம்.

பாண்டவர்கள் மஹாப்ரஸ்தானத்திற்குச் சென்ற பிறகு, வியாஸ பகவான் மஹா பாரதத்தை இயற்றிஞர். மஹா பாரதத்தை அவர் சொல்லிக் கொண்டே வர ஸ்ரீ மஹா கணபதி எழுதிக் கொண்டே வந்தார்.

வியாஸரைப் பற்றிய வரலாறுகள் :

மஹாபாரதப் போரை நேரில் கண்டு அப்படியே திருதிராஷ்டிரனுக்கு வர்ணித்து சொல்லும் சக்தியை வியாஸ பகவான் சஞ்சயனுக்கு அளித்ததாக ஒரு வரலாறு.

மஹா பாரதப் போருக்குப் பின்பு ஒரு தடவை குந்தியும், திருதிராஷ்டிரனும் வியாஸ பகவானுடன் சில நாட்கள் தங்கினார்கள். ஒரு நாள் அவர்கள் வியாஸரிடம் தங்களுடைய இறந்த உறவுக்காரர்களைப் பார்க்க விரும்புவதாகக் கூறினார்கள். வியாசரும் அவர்களை கங்கை கரைக்கு அழைத்துச் சென்று இறந்தவர்களைத் தோன்றுமாறு செய்தார்.

உடனே உறவுக்காரர்கள் யாவரும் ஒவ்வொருவராக சிறந்த ஆடை, அணிகலனுடனும் ஆயுதங்களுடனும் தங்கள் தங்கள் தேரில் வந்து காட்சி அளித்தார்கள்.

ப்ரம்ம சூத்ரம் என்ற நூலை நமக்கு வியாஸர் அருளியுள்ளார். ப்ரம்ம சூத்ரத்திற்கு நமது மதாச்சாரியார்கள் எல்லாருமே வியாக்யானம் தந்துள்ளார்கள். நாம் உய்யும் வண்ணம் நமக்கு வேதங்களையும் உபநிஷத்துக்களையும், புராணங்களையும், ப்ரம்ம சூத்ரத்தையும் அளித்துள்ள வியாஸ பகவானுக்கு ஒரு கோவில் இல்லை.

ஆனால் காலஞ் சென்ற சர்தார் வல்லபாய் பட்டேலின் முயற்சியின் பேரில் யமுனைக் கரையில் உள்ள குல்பீ என்னுமிடத்தில் வியாஸ பகவானின் ஆளுயர சிலை ஏற்பாடு செய்யப்பட்டு நிறுவப்பட்டுள்ளது. ஆனால் இங்கு ஆகம விதிப்படி பூஜை ஒன்றும் கிடையாது.

'காசி மடத்தின் சமஸ்தானத்தின்' முதல் ஆச்சார்யரான ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் ஒரு நாள் கங்கையில் தீர்த்தாமாடும் பொழுது (1542-ம் வருடம்) வேத வியாஸரின் விக்கிரகம் ஒன்று கிடைத்தது. அதை அவர் தம் மடத்திலேயே வைத்து பூஜை செய்து வரலானார். இப்படியே ஒவ்வொரு பட்டத்து ஸ்வாமியும் இவ்விக்கிரகத்தை பூஜை செய்து வரலானார்கள்.

கோவில்லாக் குறையைத் தீர்க்க 'காசி மடத்து சமஸ்தானத்தின்' 20-வது பட்டத்தில் எழுந்தருளிய ஸ்ரீ சுதீந்திர தீர்த்த ஸ்வாமி அவர்கள் பிரயாசையின் பேரில் வியாஸ பகவானுக்கு ஒரு கோவில் உருவாகியுள்ளது.

நம்முடைய புண்ணிய பூமியில் ஸப்தபுரி எனப்படும் ஏழு க்ஷேத்திரங்களில் (அயோத்தி, வட மதுரை, ஹரித்வார், காசி, துவாரகை, அவந்தி, காஞ்சி) ஏதாவது ஒன்றில் வாசம் செய்தால் மோக்ஷம் நிச்சயம் என்பதை நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ரிஷி கேசத்திலிருந்து புனித கங்கை ஏழு கிளையாக பாய்ந்து ஓடுகிறது. ப்ரவாகம் எடுத்து ஓடுகிற இப்புனித கங்கையின் கரையில் அமைந்துள்ளது ஹரித்வார் என்னும் புண்ணிய க்ஷேத்திரம். ஹரித்வாரத்திலிருந்து 8கிலோ மீட்டர் தூரத்தில் சப்த சரோவர் என்னுமிடத்தில் (இது யு.பி. மாநிலத்தில் உள்ளது) சுமார் எட்டு ஏக்கர் நிலப்பரப்பில் ஒன்னரை கோடி ரூபாய் செலவில் ஸ்ரீ சுதீந்திர தீர்த்த ஸ்வாமிகள் வியாஸ பகவானுக்கு ஒரு கோவில் எழுப்பியுள்ளார்.

கர்ப்ப கிரஹத்தில் வேத வியாஸ பகவான் எழுந்தருளியுள்ளார். நான்கு பக்கங்களில் அவருடைய சிஷ்யர்களான ஸ்ரீ பைல முனிவர், ஸ்ரீவைஸம்பாயனர், ஸ்ரீ ஜெய்முனிவர், ஸ்ரீ சுமந்து முனிவர்களுக்கு ஸன்னதிகள் உள்ளன சப்த ரிஷிகளின் (காஸ்யபர், அத்ரி, பரத்வாஜர், விசுவாமித்திரர், வசிஷ்டர், கௌதமர், ஜமதக்னி) உருவங்கள் சுவற்றில் வரையப்பட்டுள்ளன.

அஷ்ட திக்பாலர்களும் உள்ளனர். துவார பாலகர்களான ஜய, விஜயர்களுக்குப் பதிலாக இரண்டு முனிக் குமாரர்கள் கோவிலின் முகப்பில் எழுந்தருளியுள்ளார்கள். சுவர்களில் ஸ்ரீ ஸீதையுடன் கூடிய இராமர், ஸ்ரீநரஸிம்மன், ஸ்ரீ வெங்கடாஜலபதி, கீதாச்சார்யன் கண்ணன் (கீதோபதேசம்) மற்றும் வியாஸ பகவானின் வாழ்க்கையில் சில சம்பவங்களையும் சித்திரங்களாகத் தீட்டியுள்ளார்கள்.

இக்கோவிலின் கோபுரம் அறுபது (60) அடி உயரம் கொண்டது. யாத்திரீகளுக்கு தங்கும் விடுதிகளும், சமையல் அறைகளும், குளிக்கும் இடமும் சாப்பாட்டுக் கூடங்களும், நூலகமும் போன்ற வசதிகள் உள்ளன. மேலும் வேத பாடசாலைகள் உள்ளன. ஆயுர் வேத மருத்துவம் உண்டு.

இக்கோவிலைக் கட்டவேண்டிய எண்ணம் அக்டோபர் 1983-ல் உதயமாயிற்று. நவம்பர் 1984-ல் கட்டிட வேலை துவங்கியது. ஜனவரி 1988-ல் பூர்த்தியாயிற்று.

பக்தர்களின் நாம ஸங்கீர்த்தனம், சங்கநாத ஒலிகள், மேளதாள வாத்யங்களின் ஒலி விண்ணை எட்ட, பக்தர்கள் பக்தி பரவச நிலை உச்சியை எட்ட 1988-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 26-ந்தேதி காலை 9-02 மணி அளவில் ஸம்ரோக்ஷணம் மிக விமரிசையாக நடைபெற்றது.



# நாகர்கோயில் ஸ்ரீ நாகராஜர்

நமது ஹிந்து மதத்தில் நாக வழிபாடு நெடுங்காலமாகவே நிலவி வருகிறது. ஸ்ரீ மகாவிஷ்ணு நாகத்தைப் படுக்கையாகக் கொண்டு துயில் கொள்வதை,

" படுத்த பைந்நாகனைப் பள்ளி
கொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுவோமே ! "

எனப் பேயாழ்வார் நெஞ்சுருகப் பாடியுள்ளார். சிவபிரான் நாகத்தைக் கழுத்தில் ஆபரணமாக அணிந்து கோயில்களில் காணப்படுகிறார்.

இவைகள் நாக வழிபாட்டை வலியுறுத்துகின்றன. பாரத நாட்டின் தென்கோடியிலுள்ள கன்னியாகுமரியில் இருந்து வடக்கே சுமார் பத்து மைல் தொலைவில் நாகர்கோயில் என்னும் நகரம் உள்ளது. நாக வழிபாட்டிற்குப் பற்பல இடங்களில் கோயில்கள் இருப்பினும் நாகர்கோயிலில் உள்ள நாகராஜர் கோயிலே மிகச் சிறந்ததாகப் போற்றிப் புகழப் படுகிறது. இது உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை!

### கோயிலின் பெயரால் நகர்

புராண வரலாற்றுச் சிறப்புகள் மிக்க நாகராஜர் கோயில் இருக்கும் நகரம் இக்கோயிலின் பெயரால் 'நாகர்கோயில்' என்று வழங்கப்படுகிறது. இக்கோயில் நாஞ்சில் நாட்டின் கங்கையாக விளங்கும் பழையாற்றின் வலது கரையில் செந்நெல் கழனிகளும், தென்னந்தோப்புக்களும் சூழ அழகு கொழிக்கும் மரகதப் பச்சையாகக் காட்சியளிக்கிறது.

### கோயில் தோன்றிய வரலாறு

நாகராஜர் கோயில் ஏற்பட்டதற்குப் பல கர்ண பரம்பரைக் கதைகள் கூறப்படுகின்றன. புல், புதர், செடி கொடிகள் செறிந்திருந்த இந்தக் காட்டில் ஆரிய மங்கை ஒருத்தி மாட்டிற்குப் புல் அறுக்கும் போது அவள் கையிலிருந்த அரிவாள், ஐந்து தலை நாகம் ஒன்றின் தலையில் பட்டு இரத்தம் பீறிட்டது. இதைக் கண்டு பயந்து நடுங்கிய அம்மங்கை நல்லாள் பக்கத்து கிராம மக்களை அழைத்து வந்தாள்.

அவர்கள் கூட்டமாக வந்து பார்க்கும் போது ஐந்து தலைநாகம் சிலையாகக் காணப்பட்டது. இந்த இடத்தை ஒரு புனித ஸ்தலமாகப் போற்றி அக்கிராம மக்கள் ஒரு சிறிய தென்னங்கீற்றால் வேயப்பட்ட கூரைக் கோயிலைக் கட்டி வழிபட்டு வந்தனர். இதைக் கேள்வியுற்ற அக்கம் பக்கத்துக் கிராம மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து நாகராஜரைத் தரிசித்துச் சென்றனர். நாளடைவில் இந்த ஆலயம் மிகப்பிரபலமாயிற்று.

" சன்மிஷ்டை "

நாகராஜர் கோயில் கேரளக் கட்டிடக்கலை பாணியில் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. கி.பி. 1516 முதல் 1535 முடிய களக்காட்டை (Kalakad) தலைநகரமாகக் கொண்டு திருவிதாங்கூர் மாநிலத்தை மாண்புடன் ஆட்சி புரிந்த உதயமார்த்



நாகர்கோயில் ஸ்ரீ நாகராஜர் மூலஸ்தானம்



நாகராஜர் ஆலயமும் திருக்குளமும்

தாண்ட வர்மா மகாராஜா இக்கோயிலை இன்றைய நிலையில் புதுப்பித்துக் கும்பாபிஷேகமும் செய்வித்தார் என இவ்வாலயத்தில் உள்ள கல்வெட்டொன்று கூறுகிறது.

### ஞாயிற்றுக்கிழமை வழிபாடு

உதய மார்த்தாண்டவர்மா மன்னர் தொழுநோயால் மிகவும் வருந்தினர். எவ்வளவோ ராஜ வைத்தியம் செய்தும் நோயைக்குணப்படுத்த முடியவில்லை. அவர் தாம் வழிபடும் களக்காடு ஸ்ரீ சத்திய வாகீசர், கோமதி அம்பாளை நோக்கி அழுதார். நோய் நாளுக்கு நாள் முற்றியதே தவிர குணம்காணவில்லை. ஒரு நாள் அவர் கனவில் நாகராஜர் தோன்றினர்.

'நாகர்கோயிலிலிருக்கும் என்னைத் தொடர்ந்து நாற்பத்தியொரு ஞாயிற்றுக்கிழமைகள் வழிபட்டு வந்தால் உன் நோய் முற்றிலும்குணமடையும்' எனக் கூறினர். இத்தெய்வக் கட்டளைப்படி மன்னர் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமைகளிலும் தவருது வந்து நாகராஜரை வழிபட்டு நோய் நீங்கப் பெற்றுர் எனக் கர்ண பரம்பரையாக இப்பக்கத்தில் கூறப்பட்டு வருவது வெளிப்படை.

தனது நோய் முற்றிலும் குணம் அடைந்ததால் அளவில்லா ஆனந்தமடைந்த அரசர் இவ்வாலயத்தை நன்கு புதுப்பித்தார். பின்னர் தனது ஆட்சிக் காலத்தில் ஆவணி மாதந்தோறும் எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் நாகராஜர் கோயிலுக்குத் தனது காணிக்கைகள் செலுத்தி வழிபட்டு வந்தார். அதனுல் அக்காலத்திய பக்தர்களும் ஞாயிற்றுக்கிழமையையே இக்கோயில் வழிபாட்டிற்குச் சிறந்த நாளாகக் கொண்டனர் போலும்!

இன்றும் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமைகளிலும் பக்தர்கள் கூட்டம் கூட்டமாய் வந்து நாகராஜப் பெருமானுக்குப் பசும்பால் வார்த்து வழிபட்டு வருகின்றனர். இந்நாட்களில் விசேஷ பூஜைகள் ஆராதனைகள் உண்டு.

### மூலஸ்தானம்

தமிழகத்தில் வேறெந்தக் கோயில்களிலும் காணப்படாத தனிச்சிறப்பாய் இந்நாகராஜர் ஆலயத்தின் மூலஸ்தானத்தின் மேற்கூரைத் தென்னை ஓலையால் வேயப்பட்டுள்ளது. இது சம்பந்தமாகக் கதையொன்றும் சொல்லப்பட்டு வருகிறது.

உதய மார்த்தாண்ட வர்மா மன்னர் இக்கோயிலைப் புதுப்பித்துக் கொண்டிருந்த நாட்களில் ஒருநாள் அவர் கனவில் நாகராஜர் தோன்றி "ஓலைக் கூரையாலான இருப்பிடத்தையே நான் மிகவும் விரும்புகிறேன்; ஏனெனில் முதன் முதலில் அக்கூரையினடியில்தான் நான் வாசம் செய்தேன். அதனுல் அதை மாற்ற வேண்டாம்" எனக்கூறினர். அத்தெய்வக் கட்டளைக்கிணங்கவே மூலஸ்தானம் அமைக்கப்பட்டது என்பர்

அக்கூரையில் எப்போதுமே ஒரு நாகப்பாம்பு காவல்புரிகின்றது என்றும், வருஷந்தோறும் கூரை வேயப்படும் போது ஒரு பாம்பு வருவது வழக்கமென்றும் கூறப்படுகிறது. இதனையே அர்ச்சகரும் கூறுகிருர். இக்கோயிலின் அர்ச்சகர்கள் கேரளாவிலுள்ள "பாம்பமேகாட்டு இல்லம்" என்ற குடும்பத்தினரே. இவர்கள் பரம்பரையாகவே நாகத்தை வழிபடுபவர்கள்; பாம்புகளைக் குழந்தைகளை போல் வளர்ப்பவர்கள் என்பது குறிப்பு.

இவ்வாலயத்திற்கு வரும் பக்தப் பிரமுகர்கள் ஓலையாலான மூலஸ்தானத்தைக் கண்டு மூக்கில் விரல் வைத்து வியப்படைகின்றனர். தவிரவும், நாகராஜர் அமர்ந்துள்ள இடம் எப்போதும் ஈரமாகவே இருப்பதும் குறிப்பிடத்தக்கது,

அங்கிருந்து எடுக்கப்படும் மண்ணே இக்கோயிலின் முக்கிய பிரசாதமாகும். இது ஆறு மாத காலம் கறுப்பு நிறமாகவும், எஞ்சிய நாட்களில் வெளுப்பு நிறமாகவும் இருந்து வருவது குறிப்பிடத்தக்கது. இதுஉண்மை வெறும்புகழ்ச்சியில்லை.இன்றும்இதனை நேரில் [illegible]லாம்! எவ்வளவோ காலமாக எடுத்தும் அம்மண் குறை[illegible]மல் இருப்பது நா[illegible]ன் ஒப்பற்ற அருளைக் குறிக்கிறது போலும்!

மூலவரான நாகராஜனைத் தவிர்த்து இங்கு சிவபெருமான் அங்கியுடன் கூடிய சிவலிங்க வடிவிலும், திருமால்

அனந்தன் வடிவிலும் காட்சியளிக்கின்றனர். கோயில் கருங்கல் தூண்களில் சமண தீர்த்தங்கரர்களான வர்த்தமான மகாவீரர், பார்ச்சுவ நாதர், பத்மாவதி இவர்களின் திருவுருவச் சிலைகளைக் காணலாம்.

கோயிலின் தெற்கு வாயில் சீனத்து புத்த விகாரத்தை நமக்கு நினைவூட்டுகின்றது. இவ்வாறு இந்த ஆலயம் சமணம்,சைவம்வைணவம் பௌத்தம் ஆகிய இந்நான்கு மதங்களின் கூட்டுருவமாகக் காட்சியளிக்கிறது.

அந்த நான்கு மதக்கோட்பாடுகளை ஒன்று சேர்க்கும் ஒரு தெய்வச் சின்னமாகத் திகழும் பெருமையைக் கொண்டுள்ளது. இது போல வேறிடங்களில் இல்லை என்பது குறிப்பு.

நாகம் தீண்டி இறந்ததில்லை

கோயிலின் சுற்று வட்டாரத்தில் நல்ல பாம்பு, நாகப்பாம்புகள் ஏராளமாகக் காணப்படினும் இதுவரை பாம்பு கடித்து இறந்ததாகச் சான்றுகள் இல்லை என்பது வெளிப்படையாகும். காரணம் நாகங்கள் இக்கோயிலைச் சுற்றிக் காவல் புரிகின்றது என்பது ஐதீகம்! கோயில் பூந்தோட்டத்தில் உள்ள அழகிய நாகப்பூவை, நாகராஜனின் உருவக் குறியீடாகக் கருதுகின்றனர். இங்கு ஏராளமாக நாக புஷ்ப மரங்கள் பச்சைப்பசேலெனக் காட்சியளிக்கின்றன. அதைக் கோவில் அர்ச்சகர்கள் தவிர வேறு யாரும் பறிப்பதில்லை.



ஆலய வாசலில் ஐந்து தலை நாகங்களின் கருங்கற் சிலைகள்



அங்கிமட்டும் அணிந்துள்ள சிவலிங்கம்

இச்சிறப்பினை உலக மதங்களின் கலைக்களஞ்சியம் உறுதிப்படுத்துகின்றது.

பிரம்மாண்டமான நாகச் சிலைகள் :

சில ஆண்டுகளுக்கு முன் இக்கோயில் குளத்தினருகே இரண்டு தலை நாகப்பாம்பு ஒன்று காணப்பட்டதாம்! அது இறந்தவுடன் அதன் உடல் தேவஸ்தானத்தாரால் பாதுகாக்கப்பட்டு வருவது வெளிப்படை. இக்கோயில்களில் காணப்படும் நாகச் சிலைகளுக்கு ஒரு வரம்பே இல்லை.

உட்கோயிலின் வாசலில் படமெடுத்தக்கோலத்தில் அமைந்துள்ள இரு பெரிய ஐந்துதலை நாகங்களின் சிலைகள் பக்தர்கள் ஒவ்வொருவரையும் கவர்கின்றன. அவை இருமருங்கிலும் பிரம்மாண்டமாகக் காணப்படுகின்றன. தேவதச்சன் தீட்டிய தெய்வச்சிலையோ எனச் சொல்லும்படி அமைந்துள்ளன.

சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு, கூரை வேயப்பட்ட மூலஸ்தானத்திற்கு பின்னால் தொழுநோய் போன்ற பதினெட்டு நோய்களைக் குணப்படுத்தும் "ஓடவள்ளி" என்ற ஒரு பச்சிலைக்கொடி படர்ந்திருந்தது. அதனடியில் குஞ்சும் குழுவானுமாக ஏராளமான நாகப்பாம்புகள் குடியிருந்தன. இதனைக் கண்ட பக்



ருத்ர பிரயாகை கோயில்: மந்தாகினி அலகநந்தா சங்கமம்

தார்கள் அஞ்சினர். அதனால் தேவஸ்தான அதிகாரிகள் அதை நன்கு வெட்டி அகற்றிவிட்டனர்.

இதனால் சில பக்தர்கள் கோபமடைந்து ஓட வள்ளிச் செடியைத் திரும்ப வேருடன் நட்டு வளர்க்க முயன்றும் பலனில்லை, அக்காலத்தில் இங்கு வந்து நாகராஜரை வழிபட்ட பக்தர்களுக்கு இந்த "ஓடவள்ளி" இலையினைப் பிரசாதமாகக் கொடுத்து வந்தார்களாம் இங்குள்ள அர்ச்சகர்கள். ஒவ்வொரு ஓடவள்ளி இலையும் ஒவ்வொரு சுவையுடனிருக்கும் எனக்கூறபட்டுவருவது கண்கூடு.

இப்பொழுது பிரசாதமாகப் புற்று மண்ணும் சந்தனமும் வாழை இலையில் கொடுத்து வருகிறார்கள். அம்மன் கோயிலில் மட்டும் தனியாக உயர்ந்த குங்குமம் கொடுக்கப்பட்டு வருகிறது. தேவைப்பட்டவர்களுக்கு கிலோக்கணக்கில் விலைக்கு வாங்கலாம். அதனால் விபரம் தெரிந்த பக்தர்கள் முன்கூட்டியே தேவஸ்தானத்தில் ஆர்டர் கொடுத்தால் குறித்த வேளையில் தயார் செய்து கொடுக்கிறார்கள்.

ஸ்வாமி தரிசனம் செய்ய கோவிலுக்குள், 'பாண்ட்-கோட்டு-சட்டை' இவற்றை அணிந்து போகக்கூடாது. வேட்டி மட்டுந்தான் கட்டிக்கொண்டு போகவேண்டும் என்ற நியதி உள்ளது. இங்குக் கோவிலுக்குப் பக்கத்திலேயே வாடகைக்கு வேட்டிகொடுக்கிறார்கள்! சுவாமியைத் தரிசித்துவிட்டு வெளியே வந்ததும் வாடகையைக் கொடுத்து விடவேண்டும், வேட்டியோடு சேர்த்துத்தான்.

விழாக் காலங்கள்

ஆண்டு தோறும் இவ்வாலயத்தில் "தை" மாதத்தில் அனந்த கிருஷ்ணன் முன்னுள்ள கொடிமரத்தில் கொடி ஏற்றி பத்து நாட்கள் திருவிழா கோலாகலமாக எடுக்கப்படுகிறது. ஆவணி மாதம் எல்லா ஞாயிற்றுக் கிழமைகளிலும் சிறப்பாகத் திருவிழா நடைபெறுகிறது.

இவற்றுள் ஆவணி மாதக் கடைசி ஞாயிற்றுக்கிழமையன்று கொண்டாடப்படும் திருவிழா மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இவ்விழாக் காலங்களில் பல இடங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் இவ்வாலயத்திற்கு வந்து உப்பு, நல்ல மிளகு அதாவது குறுமிளகு பசும்பால், மரத்திலான கை, கால், தொட்டில் மரப்பொம்மைகள் முதலியவைகளைக் காணிக்கையாகச் செலுத்தி நாகராஜரைத் தரிசித்து அருள்பெறுகின்றனர்.

நாக தோஷங்களை ஒழிக்க இது ஒரு புண்ணிய ஸ்தலமாக விளங்குகிறது. பிற மதத்தவர்களும் காணிக்கை செலுத்தி வழிபடுவதுமுண்டு. கோயில் குளத்தினருகே காணப்படும் இரண்டு பெரிய அரச மரங்களும், துர்க்கையம்மனும் பெண்களால் மிகவும் புனிதமாகக் கருதப்படுகின்றன. பிள்ளைப் பேறு வேண்டுவோர் நாகச் சிலைகளால் சூழப்பட்ட இந்த அரச மரங்களைச் சுற்றி வலம் வந்தால் பலனடைவர் என்ற நம்பிக்கை இவ்வட்டாரத்தில் உள்ளது.

கன்னியாகுமரி அம்மனைத் தரிசிக்க வரும் யாத்திரீகர்கள் நாகர்கோயிலிலுள்ள நாகராஜர் கோயிலுக்கும் விஜயம் செய்யத் தவறுவதில்லை! இவ்வாறு வந்து வணங்கிச் செல்வோர் எல்லா நலன்களும் பெற்று மன அமைதியுடன் வாழ்கின்ற காரணத்தால் இந்த ஆலயத்தின் புகழ் நாளுக்கு நாள் அதிகரித்து வருவதுடன் பக்தர்களும் வந்து போவதும் நாடு அறிந்த உண்மையாகும்.



# உஷா பரிணயம்

திரு. கே. நாகராஜன் — திருக்குணம்.

பலி சக்ரவர்த்திக்கு நூறு பிள்ளைகள். அவர்களில் மூத்தவனுக்கு பாணாசூரன் என்று பெயர். அவனுக்கு சிவபெருமானிடம் அளவற்ற பக்தி உண்டு. அவன் அவரைப் பல விதங்களிலும் திருப்தி செய்வித்து அனேக வரங்களைப் பெற்றான். அவற்றில் ஒரு வரம் அந்த ஈசனே பாணாசூரனின் பட்டணத்தைக் காவல்காத்து வர வேண்டும் என்பதாகும். பரமேஸ்வரனும் அதற்காக வருந்தாமல் மிக மகிழ்ச்சியோடு அவன் விரும்பியபடி அந்த அசுர நகரைப் பாதுகாத்து வரலானார். பாணாசூரனும் சிவபெருமானுடைய அனுக்கிரகத்தால் ஆயிரம் கைகளைப் பெற்றுத் தனக்கு நிகர் யாரும் இல்லை என்ற பராக்கிரமத்தோடு விளங்கி வந்தான்.

பகவானிடம் பக்தி ஈடுபாடு கொண்டிருந்தாலும் அசுரத் தன்மை வாய்ந்தவன் அல்லவா? அகம்பாவத்தினால் தனக்கு முடிவைத் தானே வலுவில் தேடிக் கொண்டான்.

ஒருநாள் பாணாசூரன் சிவபெருமானிடம் சென்று “மகேச்வரா, தங்களுடைய அனுக்கிரகத்தால் நான் ஒரு குறைவுமின்றி சகலராலும் கொண்டாடப்பட்டு வருகிறேன். எனக்கு நிகராகத் தங்களைத்தான் கூற வேண்டும். வேறு எவரும் எனக்கு நிகராக மாட்டார்கள். ஆயிரம் கைகளைக் கொடுத்தீர்கள். ஆனால் அதற்கான வேலை இன்றி என் தோள்கள் தினவெடுக்கின்றன. இந்தக் கைகளுக்குத் தகுந்த வேலை எப்போது கிடைக்கும்? தெரியப்படுத்த வேணும்” என்று வேண்டினான்.

தம்மிடம் மிகுந்த பக்தி கொண்டவனாக இருந்தபோதிலும் பாணாசூரனின் அகம்பாவ பேச்சு சிவபெருமானுக்குக் கோபத்தை உண்டாக்கியது. சாரங்கனுடன் சேர்ந்து சூரனுக்கு ஒரு பாடம் போதிக்க திருவுள்ளம் கொண்டான் சங்கரன் “அடே பாணா, உனக்கு நிகர் எவரும் இல்லை என்ற கருவத்தினால் பேசுகிறாயா? உன் விருப்பப்படியே அது விரைவில் நடக்கும். உன் கொடி எப்போது அறுந்து விழுகிறதோ அப்போது உன்னைவிட பலம் வாய்ந்த ஒருவன் உன்னுடன் யுத்தம் செய்வான். அப்போது உன் அகம்பாவம் அழியும்” என்று சொல்லி மறைந்தார். பாணன் ஈசனால் குறிப்பிட்ட அந்த வேளையை எதிர்நோக்கித் தன் பட்டணத்திலே காத்திருந்தான்.

பாணனுக்கு உஷை என்று ஒரு பெண் இருந்தாள். அவள் மிகச் சிறந்த அழகி. ஒருநாள் அந்தப்புரத்தில் மேல் மாடத்தில் அயர்ந்து நித்திரையில் இருக்கையில் தன்னை மிகவும் அழகிய யுவன் ஒருவன் கைபிடிக்கக் கனவு கண்டாள். கண் விழித்தாள். அந்த யுவனின் நினைவானாள். அவனுடைய தோற்றமே அவள் மனத்தில் பதிந்து விட்டது. அவனை அடைய வேண்டும் என எண்ணி எண்ணி உருகினாள்.

அரசகுமாரியின் நிலையைக் கண்ட தோழிகள் காதல் வசப்பட்டுள்ளாள் என்பதை உணர்ந்து அவள் உள்ளம் கவர்ந்த அந்த யுவன் யாரெனக் கேட்டனர். உஷை தான் கண்ட கனவைத் தெரிவித்து அந்த யுவனுடைய அங்க லக்ஷணங்களை விவரித்துக் கூறினாள். உஷையின் அந்தரங்கத் தோழி சித்திரலேகை என்பவள் அனேக தேசத்து இளவரசர்களுடைய சித்திரங்களை எழுதச் செய்து அவற்றை உஷையிடம் காட்டச் செய்தாள். அவற்றில் துவாரகையில் இருக்கும் கிருஷ்ணனின் பேரனும், பிரத்தியும்னனுடைய குமாரனுமான அனிருத்தனுடைய சித்திரமும் ஒன்று. அதைப் பார்த்ததும் உஷையின் தலை குனியவே, அவனே கனவில் கண்ட யுவன் என்பதை சித்திரலேகை உணர்ந்து கொண்டாள். “அரசகுமாரி, கவலைப்பட வேண்டாம். இன்றிரவு உன் மனதுக்குகந்த காதலனை உன்னிடம் சேர்க்கிறேன்”. என்று கூறி, ஆகாயமார்க்கமாகத் துவாரகைக்குச் சென்று மஞ்சத்தில் நித்திரையிலிருக்கும் அனிருத்தனை திரஸ்கரிணி என்ற மாய வித்தையால் கட்டிலோடு தூக்கிக் கொண்டு இரவோடு இரவாகத் தன் அரசகுமாரி இருக்கும் அரண்மனை அந்தப்புரத்தை அடைந்தாள். உஷை அடைந்த ஆனந்தத்துக்கு அளவில்லை. அனிருத்தனும் அவள் அழகிலே மயங்கியவனாய் அவளோடு கூடிச் சுகித்து இருந்தான்.

நாட்கள் பல சென்றன. அந்தப்புரத்தில் நடக்கும் ஆனந்த நாடகம் பற்றி வெளியே யாருக்கும் தெரியாது. மனிதருடைய வாயை மூடி மறைக்கலாம். இயற்கையின் வாயை மூட முடியுமா? உஷை கருவுற்றாள். அவளுடைய மாறுபட்ட செயல்களையும் உடல் மாறுபாடுகளையும் காவலாளர்கள் சூரனிடம் தெரிவித்தார்கள். பாணாசூரன் வீரர்கள் பின் தொடர சீற்றத்துடன் அந்தப்புரத்துக்கு ஓடினான். அங்கே கண்ட காட்சி அவனை மேலும் கோபமூட்டியது. உஷையும் அனிருத்தனும் சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தார்கள்.

அந்தப்புரத்தில் நுழைந்த வாலிபனைக் கட்டி இழுத்துச் சென்று சிறையிலேயே அடைக்குமாறு உத்திரவிட்டான். வீரர்கள் அனிருத்தனை நெருங்கினர். அவனோ அவர்களிடமிருந்த ஆயுதங்களைப் பற்றி அவற்றால் அவர்களை நெருங்கவிடாமல் அடித்துத் துரத்தினான். அனிருத்

தன் சாதாரண ஆசாமி அல்ல என் பதை அறிந்த சூரன் தானே நாக பாசத்தால் அவனைக் கட்டி சிறையில் அடைத்தான். உஷை வருந்தினள். அந்தப்புரத்தில் கட்டுப்பாடுகள் அதிகமாயின. சிறகொடிந்த பறவை போல் ஆனாள் உஷை.

துவாரகையில் அனிருத்தனைக் காணாது ருக்மணி முதலானோர் கலங் கினர். எங்குத் தேடியும் கிடைக்க வில்லை. அந்தச் சமயத்தில், ஒருவர் அங்கு வந்து அனிருத்தன் உஷை பால் அழைத்துக்கொள்ளப்பட்டதை யும், அவன் தற்போது சோனிதபுரத் தில் பாணாசூரனின் சிறையில் இருப் பதையும் தெரிவித்தார். "பாண சூரனின் ஆட்சிக்கு முடிவு வந்து விட்டது, புறப்படுங்கள் இப்போதே" என்றார் கிருஷ்ணன்.

பலராமன் பிரத்தியும்னன் ஆகி யோர் யாதவ சேனைகளைத் திரட்டிக் கொண்டு கிருஷ்ணனுடன் புறப்பட் டனர். எல்லோரும் சோனித புரத்தை அடைந்தனர். பட்டணத் தைச் சூழ்ந்துகொண்டு மதில்களை இடித்துத் தள்ளினர். பாணனின் பக்திக்குக் கட்டுப்பட்டு காவல் புரிந்து வந்த ஈசன் இதனைத் தடுத் தார். யாதவச்சேனை கேட்பதாக இல்லை. எனவே அவர்களை ஈசன் தாக் கினார். ஈசனுக்கு உதவியாக விநாய கரும் சுப்ரம்மண்யரும் வந்து சேர்ந் தனர். இதற்குள் நகர வாயிலில் நடப்பவைகளை அறிந்த பாணாசூரன் வீரர்களுடன் அங்கு யுத்தத்திற்கு வந்து சேர்ந்தான். இரு தரப்பின ருக்கும் பயங்கரமாக யுத்தம் நடந் தது. கிருஷ்ணன் ஈஸ்வரனை எதிர்த் தார். பிரத்தியும்னன் சுப்ரம்மண்ய ரையும், சாத்தகி விநாயகரையும் எதிர்த்தனர். சாம்பன் பாணாசூர னைத் தாக்கிப் போர் செய்தான். பலராமன் அசுரனுடைய மந்திரி யான கும்பாண்டனை எதிர்த்தார். கிருஷ்ணனுக்கும் சிவபெருமானுக் கும் கடுமையாக யுத்தம் நடந்தது.

சிவனால் விடப்பட்ட அஸ்திரங் களுக்கு கிருஷ்ணன் எதிர் அஸ்திரம் விட்டு அவற்றைப் பயனற்றதாகச் செய்தார். கிருஷ்ணன் மோகனா ஸ்திரத்தைப் பிரயோகிக்க ஈசன் அதில் கட்டுண்டு மயங்கி நின்றார். அந்த நேரத்தில் கிருஷ்ணன் அவ ரைத் தனியே விட்டு விட்டு பாணா சுரனிடம் திரும்பினார். ஏககாலத் தில் அஸ்திரங்களைப் பிரயோகித்து பாணாசூரனது வில், தேர், கொடி, குதிரைகள், சாரதி அனைத்தையும் நிர்மூலமாக்கினார். அசுரனோ ஆயி ரம் கைகளாலும் அனேக அஸ்திரங் களை மாற்றி மாற்றிப் பிரயோகித் தான். கிருஷ்ணன் நாராசம் எனப் படும் அஸ்திரத்தைப் பிரயோகிக்க அது பாணாசூரனின் மார்பில் வந்து தாக்கியது. அவன் சிறிது நேரம் நிலைகுலைந்து நின்றான்.

பாணாசூரனின் தாய் தன் குமா ரன் யுத்தத்தில் அடிபட்டு நிற்ப தைக் கண்டாள். புத்திரபாசம் மேலெழும்ப அவனைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆவலில் நிர்வாண மாக ஓடி வந்து இருவருக்கும் இடை யிலே நின்றுகொண்டு கிருஷ்ணனைப் பார்த்து நின்றாள். அந்தக் காட்சி யைக் காணக்கூடாதென கிருஷ்ணன் சற்று நேரம் முகத்தைத் திருப்பிக் கொண்டார். அந்த நேரத்தில் பாணன் யுத்தகளத்தை விட்டுவிட்டு அரண்மனைக்குத் திரும்பினான்.

மோகனாஸ்திரத்திற்குக் கட்டுப் பட்டுத் தாம் நிற்க வேண்டிய தாயிற்றே என சிவபெருமான் கோபம் கொண்டார். அவருடைய கோபம் உஷ்ணமாகப் பரவி தகித் தது — வெப்பத்திற்கு மாறாக கிருஷ்ணன் குளிர்ச்சியை உண்டாக்க இரண்டும் சமமாகியது.

இதற்குள் பாணாசூரன் புதிய பலத்துடன் மீண்டும் சண்டைக்கு வந்தான். கிருஷ்ணன் இந்தமுறை அவன் வீரர்கள் அனைவரையும் அடி யோடழித்து சக்ராயுதத்தைப் பிர யோகித்து அசுரனின் கைகளில் நான்கை மட்டும் விட்டுவிட்டு மற்ற அனைத்தையும் துண்டித்தார். தன்னுடைய பக்தனாகிய பாணாசூரன் இன்னும் சிறிது நேரத்தில் கிருஷ்ண னால் கொல்லப்பட இருப்பதை உணர்ந்த ஈசன் கிருஷ்ணனிடம் வந் தார்.

"நாராயணா, அசுரனின் ஆணவம் அழிந்து விட்டது. நித்தியமான வாழ்வையும், அளவற்ற ஆற்றலையும் அறிவையும் என்னிடம் கோரிப் பெற்ற பரமபக்தனான பாணாசூரன் அந்தப் வலிமையால் அறிவிழந்து இந்த யுத்தத்திற்கு தானே வழி வகுத்தான். ஆணவம் அழிந்து உன் முன் நிற்கும் என் பக்தனுக்கு இறங்கி அருள வேண்டும். மேலும் பிரகலாதனுக்குத் தாங்கள் தந்த வாக்கின்படியும் இவனை இரக்ஷித் தருள வேண்டுவதுதானே முறை. பிரகலாதனுடைய வமிசத்தில் பிறப்பவர்களைத் தாங்கள் காப் பாற்றுவதாக அன்று கூறியிருப்பது வீண் போகலாமா?" என்று வேண்டி னார். கிருஷ்ணனும் கோபம் தணிந்து சாந்தரானார்.

பாணாசூரன் ஸ்ரீ கிருஷ்ணனின் பாதாரவிந்தங்களில் வீழ்ந்து வணங்கி "பிரபோ என்னை மன்னிக்க வேண்டும். எனக்குச் சமம் யாரு மில்லை என்ற ஆணவம் என் அறிவை அழித்து விட்டது. இறை வனால் அருளப்பட்ட அறிவும் ஆற்ற லும் தன்னை அடுத்து வந்தவர்க்கு அஞ்சேல் என அபயம் அளிப்பதற்கே என்பதை முற்றும் அறியாத்தால் கெட்டேன். தன் பலமும் செல்வமும் தனக்கே அல்ல, தன்னை அண்டின வர்க்கு அளித்து மகிழ என்ற மந் திரத்தை மறந்ததால் கெட்டேன். கைகள் தருவதற்கும் தொழுவதற் கும் என்ற தத்துவத்தை மறந்து ஆயிரம் கைகளையும் அஸ்திரம் பிடிக் கத்தான் என அகம்பாவம் கொண் டேன். இன்றோடு என் அகம்பாவம் அழிந்தது. கொடுப்பவர் கை மேல். ஆகவே இன்று கொடுப்பதிலே சிறந்த தான கன்னிகாதானமாக என் மகள் உஷையை உங்கள் பேரன் அனிருத் திரனுக்கு மணம் முடித்து அருள் புரிய வேண்டும்" என்று வேண்டி னான். கிருஷ்ணனும் அவன் கோரிக் கையை ஏற்று அனிருத்தனையும் உஷையையும் அழைத்துக்கொண்டு துவாரகைதிரும்பிஅங்குஅவர்களுக்கு எல்லோரும் கண்டுகளிக்கக்கோலாகல மாகத் திருமணம் செய்து வைத்தார்.

# ஸ்ரீபத்ராவதி சமேத ஸ்ரீபாவநாராயணசுவாமி

வளங்கள் பெற்று மலைகள் சூழ் சேலம் செவ்வை நகர் ஜன சந்தடி மிக்க இடத்தில் பழைய சிறிய ஆலயங்களில் ஒன்றான ஸ்ரீ பத்ராவதி சமேத ஸ்ரீ பாவ நாராயண சுவாமி திருக்கோயிலுக்குச் சென்றிருந்தேன். திருப்பதி ஸ்ரீ பத்மாவதி தாயார் சமேத பாலாஜி உருவங்கள் மாதிரி ஸ்ரீ பத்ராவதி சமேத ஸ்ரீ பாவநாராயண சுவாமி சங்கு, சக்கரங்களுடன் இடது கையில் கதையும், வலது கை அபய அஸ்தமாகவும், ஸ்ரீ பத்ராவதி தாயார் இடது கையில் தாமரை புஷ்பமும் நல் அலங்காரங்களுடன் கிழக்கு நோக்கிக் காட்சியளித்துக் கொண்டிருந்தார்கள். மூர்த்திகள் சிறியனவாகிலும் கம்பீர தோற்றமும், கவர்ச்சியும் கொண்டிருக்கின்றன. கோயிலின் வரலாறு கேட்டும்

**திரு. எம். என். திருமலய்யர், சேலம்-2.**

அறிந்தும் கொண்டேன். சுவாமியின் அவதார மாதம் சித்திரை நட்சத்திரம் அஸ்தம் என்றும், சிறுபான்மை வகுப்பினரான பத்மசாலியர்களின் குலதெய்வம் என்றார்கள்.

**புராண வரலாறு :**

பத்மசாலியர் தங்களை மார்க்கண்டேய கோத்திரத்தைச் சார்ந்தவர்கள் என்று கூறிக்கொள்ளுகிறார்கள். மார்க்கண்டேயர் என்றதும் என்றும் பதினாறு வயது சிரஞ்சீவி என்று எல்லோரும் அறிவர். மார்க்கண்டேயன் சிவபெருமானைப் பூஜித்துக் கொண்டிருக்கையில் அவனைப் பற்றி இழுக்க வந்த யம தர்ம ராஜனை, லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு உதைத்துத் தன் சூலத்தால் கொன்றார் சிவபெருமான் என்ற கதை அனைவரும் அறிந்ததே. பிறகு தேவர்களின் வேண்டுகோளின்படி எமனுக்கு உயிர்ப் பிச்சையளித்தார். தஞ்சாவூர் ஜில்லா திருக்கடையூர் யம சம்ஹார க்ஷேத்திரம் என்று புராணம் கூறுகிறது.

பிரளய காலம் வந்தபொழுது எல்லா உலகங்களும் ஊழிக்கால வெள்ளத்தில் மூழ்கின. அந்தப் பெரும் கடலில் ஓர் ஆல் இலையில் ஒரு குழந்தை பள்ளிக் கொண்டிருந்தது. மார்க்கண்டேயர் அந்த பச்சிளங்குழந்தையைக் கண்டு மனம் உருகி எடுக்க அருகில் செல்ல அந்தக் குழந்தை மூச்சை இழுத்தவுடன் அவரும் உள்ளே சென்றார். அங்கே அவர் பல உலகங்களைக் கண்டு வெகு காலம் தங்கியிருந்ததாகவும் அந்தக் குழந்தை மூச்சை வெளியே விட்ட பொழுது அவர் வெளியே வந்ததாகக் கூறப்படுகிறது.

மார்க்கண்டேயர் வெளி வந்த சமயம் பரமசிவன் அவர்முன் தோன்றி 'மார்க்கண்டேயா, இந்தக் குழந்தை உருவமுள்ளவர் திருப்பாற் கடலில் சயனித்திருப்பவரும் உலகை ரட்சிக்கும் பொறுப்பைக் கொண்டவருமான ஸ்ரீமந் நாராயணன் ஆவார். எனக்கும் இவருக்கும் ஓர் அணு வேற்றுமையும் இல்லை' என்று உபதேசம் செய்தார். இதிலிருந்து வைஷ்ணவமும், சைவமும் ஒன்றே என்று நன்கு அறியலாம். இதிகாசங்களில் கூறப்பட்ட மார்க்கண்டேய சரிதம் தனிப் பெருமை கொண்டது. அதில் பத்ம புராணத்தில் சொல்லப்படுவது கருத்துள்ளதும் சுவையானதுமாகும்.

மிருகண்டு முனிவரின் புதல்வர் மார்க்கண்டேயர். மிருகண்டு ப்ருகு மஹரிஷியின் புதல்வர். மார்க்கண்டேயர் ஐந்து வயது சிறுவனாக இருந்த போது ஒரு நாள் தன் வீட்டுத் திண்ணையில் விளையாடிக் கொண்டிருந்தார். வாசல் வழியே போய்க் கொண்டிருந்த ஞானி ஒருவர் சிறுவனை உற்றுப் பார்த்து நின்றார். உள்ளே இருந்த மிருகண்டுவும் அவர் பத்தினி மயூரவல்லியும் ஓடி வந்து தங்கள் பிள்ளையை உற்றுப் பார்ப்பதின் நோக்கம் என்னவோ என்று கவலையால் கேட்க, ஞானி இக்குழந்தைக்கு தனது பதினாறாவது ஆண்டில் முடிவு காலம் ஏற்படும் என்று சொல்லி சென்று விட்டார். மிருகண்டு தன் பிள்ளைக்கு உபநயனம் செய்வித்து எல்லா முனிவர்களையும், பெரியோர்களையும் நமஸ்கரிக்கச் செய்தார். அவர்கள் மகிழ்ந்து 'நீண்ட ஆயுள் உண்டாகுக' என்று ஆசீர்வதித்தனர். அன்று முதல் மார்க்கண்டேயர் தன் பெற்றோர் சொல்படி உறுதியுடன் வயதிலும், வித்தையிலும், தவத்திலும், ஒழுக்கத்திலும் தன்னைவிட பெரியவர்களைக் கண்டால் அவர்களை அடி பணிந்து அவர்கள் அன்பொழுகச் சொல்லும் ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொண்டார்.

ஒரு சமயம் காட்டின் வழியே சென்று கொண்டிருந்த சப்தரிஷிகளை அணுகி வழக்கம் போல் பணிந்து நிற்க, சப்தரிஷிகள் "நீ தீர்க்காயுசுடன் விளங்குவாய்" என்று ஆசி மொழிந்தனர். ஆசீர்வாதம் செய்த பின்பு இன்னும் ஐந்து தினங்களில் ஆயுள் முடிவு விதிக்கப் பட்டிருந்ததை உணர்ந்தனர். சப்தரிஷிகள் தங்களுடன் மார்க்கண்டேயரை பிரம்ம தேவனிடம் அழைத்துச் சென்று வணங்கச் செய்தனர். அவர் மார்க்கண்டேயருக்கு நீண்ட ஆயுளை ஆசீர்வதித்தார். இந்த பால் வடியும் முகமுள்ள பையன் யார் என்று கேட்டார். ரிஷிகள் இவர் ப்ருகு மகரிஷியின் பேரன் என்றும், இவன் வயது

அற்பமானதென்றும், உபநயனம் செய்த நாள் முதல் பெரியோர்களை யும் ரிஷிகளையும் அணுகி நமஸ்காரம் செய்து ஆசீர்வாதம் பெற்று வரு கிறார் என்பதையும் தெரிவித்தனர். நாங்களும் இவனுக்கு ஆசீர்வாதம் செய்த பிறகே விசாரிக்கிறீர்கள் என் றனர்.

பிரம்மாவும் மார்க்கண்டேயருக்கு அருள் புரிந்து இவ்விதமாக கூறு கிறார்: "மனம், வாக்கு, காயம்' என்ற மூன்று கரணங்களால் வழி படும் பெரியோர்களின் ஆசீர்வாதம் ஒரு போதும் பொய்க்காது. அவர் களுடைய வாக்கு தெய்வவாக்கு'.

மார்க்கண்டேயருக்கு தன்னைப் போலவே ஆயுளை விதித்தாராம் பிரம்மதேவன். இதற்கிடையில் பிள்ளையைக் காணுமல் பெற்றோர்கள் கலங்கினர். சப்த ரிஷிகளால் பூமிக்கு மறுபடியும் அழைத்து வரப்பட்ட மார்க்கண்டேயரின் கதையை பெற் றோர்கள் கேட்டு அளவில்லா ஆனந் தம் கொண்டனர். மார்க்கண்டேயர் திருக்கடையூர் சென்று சிவபெரு மானை வழிபட்டு சிரஞ்சீவியாக இருக்க வரம் பெற்று குன்றுத வளமை யுடன் விளங்கினர்.

வருடங்கள் பல ஓடின. மார்க்கண் டேயர் இப்பொழுது மகரிஷியாகி விட்டார். தவம் செய்யுமிடம் பிர சித்தியாகிவிட்டது. பல முனிவர் களும், ராஜரிஷிகளும் வந்து கொண் டிருந்தனர். வனவாச காலத்தில் ஸ்ரீராமபிரானும் தம்பி இலக்குவனும் சீதையும் தொடர புஷ்கரக்ஷேத்தி ரத்தில் மார்க்கண்டேய மகரிஷி தவம் செய்யுமிடத்துக்கு வந்தனர். அங்கு சௌபாக்கிய தீர்த்தத்தில் நீராடி ஸ்ரீ ராமபிரான் தம் தந்தை யாருக்கு சிரார்த்தம் செய்ய விழைந்து அதற்கென ஜமதக்னி, பரத்வாசர், லோமேசர், தேவலர், சமீகர் என்னும் மகான்களை அணுகி சிரார்த்தத்தை நடத்தி தர வேண்டு மென பிரார்த்தித்தார். ஸ்ரீ ராம பிரான் அம்முனிவர்களை தம் பித்ருக் களாக வரித்து உபசரித்தார். சீதா பிராட்டி அன்னம் பரி மாறுவதற்கு வந்தாள். பரிமாற வந்த பிராட்டியார் வெட்கத்தால் தலை குனிந்து வேகமாக உள்ளே சென்று விட்டாள். பிறகு வெளியே வரவில்லை. தம்பி இலக்குமணன் உள்ளே சென்று தாமதமின்றி உணவு வகைகள் பரிமாறி வந்த முனிவர்களை மகிழ்வித்தார். முனிவர்கள் திருப்தி யுடன் ஆசீர்வதித்துச் சென்றனர்.

பிராட்டியார் ஏன் அன்னம் பரி மாற வெளியே வரவில்லையென ஸ்ரீ ராமபிரான் வினவ முனிவர்கள் இருக்க வேண்டிய இடத்தில் வேறு யார் யாரோ அமர்ந்திருப்பதையும், நடுவில் மாமனுர் தசரத சக்கர வர்த்தியைக் கண்டதாகவும், மரவுரி யும் தவவேடமும் கொண்டு தான் இருப்பதால் அவர் முன்னே வரு வதற்கு வெட்கமடைந்ததாகவும் கூறினுள். மார்கண்டேயரின் ஆசர மத்தின் மகிமையைக் கண்டு ஸ்ரீ ராமபிரான் வியந்தார்.

பின்ஞெருகால் மார்க்கண்டேயர் யாகம் செய்கையில் யாக குண்டத்தி லிருந்து தோன்றிய புகை தூம்ரா வதி. அந்தப் புகையை மார்க்கண் டேய மகரிஷி மனைவியாகப் பாவித் தார். அந்த குண்டத்திலிருந்து வெளி வந்தவர் 'பாவணு ரிஷி' என் பவர். பாவணு ரிஷி தன் மனோ வலி மையால் தாமரை வேரினுல் நெய்த ஆடைகளைத் தேவர்களுக்கும், மானி டர்களுக்கும் வழங்கி மானங்காத் தார். சிவபெருமான் புலித்தோலை ஆடையாகத் தருமாறு வேண்ட புலியை வேட்டையாடி அதன் தோலை வழங்கியதாகக் கூறப்படுகிறது.

கனகாத்திரிபுரத்தில் சூரியன் மக ளான பத்ராவதியை பாவணு ரிஷி சந்தித்துத் திருமணம் செய்து கொண் டார். அவர்களுக்குப் பிறந்த 101 புதல்வர்களின் வழித்தோன்றல்கள் தாங்கள் என்று பத்மசாலிய வகுப் பினர் கூறிக்கொள்ளுகிறுர்கள். பாவணு ரிஷி இல்லாதபோது அவரது மகன்களிடமிருந்து சாளுவாசேனன் என்பான் தன் மனோ பலத்தால் ஆடை நெய்யும் மந்திரத்தைத் திருடிச் சென்றுன்.

**சரித்திர வரலாறு :**

இக் குலமக்களில் சைவ வைணவப் பிரிவினர் உள்ளனர். விஜயநகர சாம்ராஜ்ஜியத்தில் இந்த சமூகத் தினர் தங்கள் குலத்தொழிலான நெய்யும் கலை செய்து கொண்டு பரவ லாக வாழ்ந்து வந்தனர். புலித் தோலால் தம்மை அலங்கரித்துக் கொண்ட மகேஸ்வரனைக் குலதெய்வ மாக வணங்கி வழிப்பட்டார்கள். கோயில்களுக்கென்றுச் சிறப்பாக ஆடைகளைக் நெய்து வழங்கிய இவர் கள் அரண்மனைகளுக்கும், பெருங்குடி மக்களுக்கும் ஆடைகள் நெய்து கொடுத்தனர். மைசூர் மன்னருக்கு நவராத்திரி தசரா விழாவின் போது ஆடைகளை கொடுப்பவர் பத்மசாலி யர். நாடாண்ட அரசர்கள் இவர் களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து இவர்களின் தொழிலை ஊக்குவித்து வந்தார்கள். இந்த நெய்யும் கலையில் மற்ற இனத்தவர்கள் செங்குந்தர், தேவாங்கர், சேனியர், சௌராஷ்டிரர் ஆகியோரும் ஈடுபட்டும் இருந் தார்கள்.

பத்ம சாலியர்களின் தாய் மொழி தெலுங்கு. கி.பி. 11-12ம் நூற்றுண்டு களில் சோழ அரசர்களின் காலத்தில் பத்மசாலியர்களின் ஒரு பிரிவினர் ஆந்திராவிலுள்ள கோல்கொண்டாவி லிருந்தும், பிற இடங்களிலிருந்தும் தமிழகத்துக்கு அழைத்து வரப்பட் டார்கள். கீழைச் சாளுக்கியர்களுக் கும் சோழர்களுக்கும் அப்பொழுது அரசியலில் நெருங்கிய தொடர்பு இருந்தது.

விஜயநகரப் பேரரசுக்கும், முஸ்லீம் அரசுகளுக்கும் சண்டை ஏற்பட் டது. இது இந்து மதத்துக்கும் முகம் மதிய அரசுக்கும் ஏற்பட்ட சண்டை

யாகும். இந்துக் கோயில்களிலருந்து செல்வங்கள் முகம்மதியர்களால் கொள்ளையடிக்கப்பட்டன. பல லட்சம் இந்துக்கள் 13-ம் நூற்றுண்டிலிருந்து 15ம் நூற்றுண்டுக்குள் கொல்லப்பட்டனர். இந்து சாம்ராஜ்ஜியமான விஜயநகரம் கி. பி. 1565ல் தரைமட்டமாகியது. இதன் காரணமாகப் பல இன மக்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து தென் திசையில் குடியேறும்படியான சூழ்நிலை ஏற்பட்டது என்கிறது வரலாறு. கர்நாடகத்திலும், ஆந்திராவிலும் கேரளா எல்லைகளிலும், தமிழகத்தில் பல இடங்களுக்கும் பத்மசாலியர் குடியேறினுர்கள். அப்படி வந்த பத்மசாலியர்களின் ஒரு பிரிவினர் சேலம் செவ்வை நகரில் வந்து தங்கினர். அந்த இடம் இன்னும் கூட "சாவடி" என்று அழைக்கப்படுகிறது. மற்றெரு சாரார் மணிமுத்தாற்றின்கரை தாண்டிக்கிழக்குப் பகுதியில் அதாவது அம்மாபேட்டை அருகில் குடியேறினுர்கள். நாயக்கர்களின் ஆட்சி அப்பொழுது சேலத்திலும் அதன் சுற்றுப்புறமுள்ள இடங்களிலும் நடைபெற்று வந்தது. அதே சம காலத்தில் தமிழகத்தில் சென்னை, காஞ்சிபுரம், தர்மபுரி, திருச்சி, மதுரை மற்ற இடங்களுக்கும் பெரும்பாலோர் குடியேறினுர்கள்.

சேலம் செவ்வை நகரில் தங்களுக்கென்று ஒரு கோயிலை 16ம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் கட்டிக் கொண்டார்கள். அந்த கோயில்தான் "ஸ்ரீ பத்ராவதி சமேத ஸ்ரீ பாவநாராயண சுவாமி". கோயில் வைஷ்ணவ சம்பிரதாயம். குலதெய்வங்கள் பல வேறுபட்டியிருப்பினும் அனைவரும் வணங்குவது "பாவணு ரிஷியையே". தமிழகத்தில் சில இடங்களில் "பாவணுரிஷி"க்குக் கோயில்கள் உள்ளன. புலி வாகனம் கொண்டவர் "பாவணு ரிஷி". ஆகவே பத்மசாலியர்கள் புலிக்கொடியை அடையாளமாகக் கொண்டுள்ளனர்.

"பாவணு ரிஷி" தாம் நெய்த ஆடையின் கடைசிப் பகுதியை பைரவருக்குக் கொடுத்தாராம். அதற்காக அவர் வருந்தி பாவணு ரிஷி தயாரிக்கும் ஆடைகள் ஆறு மாதங்களில் கிழிந்து விடட்டும் என்று சாபமிட்டாராம். கர்ண பரம்பரையாக இப்படியும் ஒரு கதை.

1907ல் சென்னை அரசாங்கம் வெளியிட்ட பாராமஹால் பதிவேடுகளில் பத்மசாலியரைப் பற்றி கூறப்படும் செய்திகள்—

"தொடக்கக் காலங்களில் ஒரு குறிப்பிட்ட நெசவாளர்கள் "மார்க்கண்டேயலு" என்னும் முனிவருக்கு வருடத்துக்கு ஒருமுறை ஆடை வழங்கி வந்தனர். மார்க்கண்டேயர் மிருகண்டு மகரிஷியின் புதல்வர். தம் கடமையிலிருந்து அந்த நெசவாளர்கள் தவறிய காரணத்தால், மார்க்கண்டேயர் தம் தவ வலிமையால் வேள்வித் தீ வளர்க்க அதிலிருந்து ஒரு மனிதன் தோன்றினுன். அவன் "பத்மசாலிவாடு" என்று அழைக்கப்பட்டான். அவன் ஆடைகள் நெய்து மார்க்கண்டேயருக்கு வழங்கினுன்.

அவன் ஒரு நாள் மார்க்கண்டேயரை அணுகி தங்கள் அடிமையாகிய நான் யாரை வணங்கி மோட்சம் அடைய வேண்டுமெனக் கேட்க, தம்மைப் பூஜித்து மூலப்பொருளை அடைவாயாக என்று கூறி விட்டாராம்.

"ஆந்திர பதா பாரிஜாதமு" என்னும் பத்மசாலியர்களின் ஆதி புராணத்தில் பாவணுரிஷி பத்ராவதி இவர்களுக்குப் பிறந்த 101 பேர்களில் 100 பேர்களின் வழித்தோன்றல்கள் பத்மசாலியர் என்றும், எஞ்சிய ஒருவரின் வழித்தோன்றல்கள் "பட்டு சாலியர்" என்றும் பெயர் பெற்றுர்கள் என்று கூறுகிறது.



ஸ்ரீபாவணுரிஷி



ஸ்ரீ பத்ராவதி தாயார்

பத்மசாலியர் திருமணத்தின்போது மணமக்கள் மஞ்சள் ஆடை அணிவது வழக்கம். பட்டுசாலியர் பட்டாடைகள் அணிவார்கள்.

"சாலிகா' என்னும் சமஸ்கிருதச் சொல்லின் திரிபு 'சாலிய' என்று மைசூர் அரசாங்கம் பிரசுரித்த (Ethonographical Survey of Mysore Sola Caste) என்னும் அறிக்கை கூறுகிறது. இந்த அறிக்கை சூரியனின் இரு மகள்களான பிரசன்னுவதி, பத்ராவதி இவர்களை பாவனு ரிஷி மணந்தாரென்றும், இவர்களின் சந்ததியார் தான் பத்மசாலிக வமிசத்தினர் என்றும் கூறுகிறது. மேலும் விஜய நகர சாம்ராஜ்ஜியத்தின் தலைநகரான ஹம்பியிலிருந்து மைசூர் மன்னர் 'கெம்பே கௌடா' காலத்தில் மைசூர் மாநிலத்திற்குப் பத்மசாலியர் வருகை புரிந்ததாகவும் இந்த அறிக்கை கூறுகிறது.

**திருத்தொண்டர் புராணம் :**

பெல்லாரி மாவட்டத்திலுள்ள கம்பிளி நகரத்தில் சிவ பக்தரான நேசர் வாழ்ந்து வந்தார். இவர் சாலிய குலத் திலகம். கி. பி. 7ம் நூற்றுண்டைச் சேர்ந்தவர். தம் குல மக்களுக்கு நல்வாழ்வை அளிக்கப்பாடுபட்டார். சிவனடியார்களுக்கு ஆடைகள் அணிவித்துக் கௌரவித்து இறைவன் திருஅருளுக்குப் பாத்திரமானுர். அறுபத்து மூன்று தொண்டர்களில் இந்த ஒரு தொண்டர் மட்டும் சாலிய வகுப்பைச் சேர்ந்தவர். அவரே நேச நாயனுர் என்று அழைக்கப்படுகிருர்.

**செப்பேட்டில் காணும் விவரங்கள் :**

இந்த செப்பேடு பண்டாரவாடா பத்மசாலி சமூகத்தைச் சேர்ந்த நெசவாளர் சபையாரின் பட்டயமாகும். இந்த சமூக மக்கள் ஒன்று கூடி காஞ்சியில் செய்த தீர்மானங்களைக் குறிக்கின்றன. தெலுங்கில் எழுதப்பட்ட இந்த செப்பேட்டின் இறுதியில் புலிச் சின்னம் உள்ளது. செப்பேட்டின் முதல் பக்கம் 'சுபமஸ்து' என்னும் மங்கலச் சொல்லுடன் தொடங்குகிறது. சகசகாப்தம் ஆனந்த ஆண்டு சித்திரை மாதம் எழுதப்பட்டுள்ளது. அப்பொழுது விஜய நகரத்தை ப்ரௌதவேத மகாராஜா ஆண்டு வந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. வியாசராஜா, நாட்டின் பொறுப்பை ஆறு மாத காலம் ஏற்றுக்கொண்ட சமயம் என்று தெரிகிறது. செப்பேட்டிலிருந்து பண்டாரவாடா பத்மசாலிய சபையாரின் முன்னேர்கள் ஆந்திர மாநிலம் ஸ்ரீ சைலத்தில் கோயில் கொண்டுள்ள மல்லிகார்ஜுன சுவாமியை வணங்குபவர்களாகவும், பெண் தெய்வம் இலட்சுமிக்குப் பணிவிடை செய்யும் ஊழியர்களாகவும் இருந்திருக்கிருர்கள் என்று அறியப்படுகிறது. மார்க்கண்டேய புராணத்துக்கு மூல நூல் தெலுங்கில் சிவாலபிலியாடி மகரிஷி இயற்றிய புராணம் என்பர்.

பத்மசாலியர் புருஷோத்தம கஜபதி என்னும் பெருமகனிடமிருந்து விருதுகள் பெற்றவர்களாகவும், கிருஷ்ண சுந்தரராஜா என்பவரின் உயிர்காத்தவர்கள் என்றும், இச்சபையார் மார்க்கண்டேய கோத்திரத்தை சேர்ந்தவர்கள் என்றும், ஐம்பத்தாறு தேசங்களிலும் தம் குலத்தோர் பிரபுக்களாக இருந்ததாகவும் உரிமை கொண்டாடுகிருர்கள்.

செப்புப் பட்டயத்தின் இரண்டாம் பக்கம் பத்மசாலிய பண்டாரகுல சபையினர் ஒன்றுகூடி செய்த சில தீர்மானங்கள் அடங்கியது. வரிப்பணம் ஒவ்வொரு நெசவுக்கும் நெசவாளர்களிடம் பெற்று அந்தக் குடும்பத்தினர் திருமணத்தின்போது வருகை தந்தோருக்கு வரவேற்று நாள்படி வழங்குவர். இந்தத் தொகைக்கு "பாத்ய பரநாடுலு" என்று பெயர்.

**பத்மசாலியரின் விருப்பமான தெருக் கூத்து :**

பத்மசாலியர் நடத்தும் கூத்து பழமையுடையது. குறிப்பிட்ட சில ஊர்களில் உள்ள இச்சமூகத்தைச் சேர்ந்தவர்கள் நடத்துவது. பிற சாதியினரை சேர்த்துக்கொள்வதில்லை. பெண்கள் இக் கூத்தில் வேடம் போட்டுக் கொள்வதில்லை. ஆண்களே பெண் வேடமும் போட்டுக்கொள்கிருர்கள். பாடல்கள் சிறப்பிடம் பெறுகின்றன. டாக்டர் அ. அறிவுநம்பி கூறுகிருர்; எட்டு ஆண்டுகளுக்கு முன்பு வரை காரைக்குடி மார்க்கண்டேயர் கோயிலுக்கு முன்பு நடைபெறுவது வழக்கமாக இருந்ததாம். இப்பொழுது நிறுத்தப்பட்டுள்ளது.

ஆந்திர மாநிலத்திலும், தமிழகத்திலும் 'பால நாகம்மா' கதை பிரபலமானது. தெலுங்கு மொழியில் 'புர்ரகதா' என்று கூறப்படும் 'தந்தான, தந்தான தந்தனு' என்று பாடல் முடியும் ஒருவகை நாட்டுப்புறக்கலை உண்டு. தெருவில் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இரவு முழுவதும் நடப்பது. இவ்வகை ஆட்டங்களில் பல கதைகள் நடத்தப்பட்டு வருகின்றன. அவற்றுள் 'பால நாகம்மா' கதையும் ஒன்று. 'பால நாகம்மா' பத்மசாலியர் பிரிவை சேர்ந்தவள் என்று கூறுகிருர்கள்.

இச் சமூகத்தைச் சேர்ந்த அநேகர் சீரும் சிறப்பும் பெற்று பட்டு ஜவுளி உற்பத்தியாளர்களாகவும், அரசியல் துறையில் பெரும் பதவிகள் வகித்த போதிலும் பின்தங்கியே உள்ளனர். ஒரு தொழிலதிபர் ஸ்ரீரங்கம் கோபுரத்திற்கென 13 கலசங்கள் வழங்கியுள்ளார்.

**ஆதார நூல்கள் :**


1) பத்மபுராணம்.
2 திருத்தொண்டர் புராணம்.
3) இந்திய வரலாற்றுச் சுருக்கம்.
4) குங்குமம் வார இதழ் 13-3-83


★

# நதிகள் காட்டும் நல்வழிகள்

ஸ்ரீராமகதாரத்ன V. தியாகராஜன்
சென்னை.

''எல்லாவற்றிலும் நல்லதையே காணவேண்டும்' என்று மேனாட்டுக் கவிஞன ஷேக்ஸ்பியர் கூறியதாக வழக்கு. ஆனல் நம் நாட்டுப் பெரியோர்கள் எல்லாவற்றிலும், நல்லவை மட்டுமல்ல, தெய்வீகத்தையே கண்டனர்.

கம்பன் தனது இராமாயணத்தில் சரயுநதியைப்பற்றி வருணிக்கும் போது ''திரு நீறணிந்த சிவபெருமானைப்போல் புறப்பட்டமேகம் ஆகாய வழியே சென்று கடல் நீரைக்குடித்து கார்மேகமாக வந்த காட்சி திருமகள் நாயகனை திருமால் வந்த மாதிரி தோன்றியது'' என்று கூறுகிருர்.

நீறணிந்த கடவுள் நிறத்த வான்
ஆறணிந்து சென்றூர்கலி மேய்ந்து
அகில்
சேறணிந்த முலைத்திரு மங்கைதன்
வீறணிந்தவன் மேனியின் மீண்டதே.

சிவ விஷ்ணு பேதமில்லாது கம்பன் கூறும் இதே காட்சி பல புலவர் பெருபெருமக்களின் கண்களுக்குப் பற்பல விதமாகத் தோன்றுகின்றது.

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பனி பூண்ட வித்தகத் தெய்வமான கலைமகள் போல் புறப்பட்ட வெள்ளை மேகம் கடல் நீரைக் குடித்துக் கார் மேகமாக வந்தது கரிய திருமேனியுடைய அம்மை பார்வதி போலிருந்தது என்கிருர் நைடதத்தின் ஆசிரியரான அதிவீரராமபாண்டியர்.

ஒரு காலத்தில் சிவபெருமானும் திருமாலும் வெண்மை நிறத்தவராயிருந்தனர்' தேவாசுரர்கள் பாற்கடல் கடையும்போது பொங்கி வந்த நஞ்சு திருமாலைத் தாக்க, திருமால் நீல நிறமுடையவரானர். பாற்கடல் கடைவதற்கு முன்னல் வெண்மை நிறத்துடனிருந்து திருமால் மாதிரிப்புறப்பட்ட மேகம் நீரைக் குடித்துச் சூல் கொண்ட மேகமாகக் கரிய நிறத்துடன் திரும்பிய தன்மை, பாற்கடல் கடையப்பட்டபின் நீல நிறமாக மாறிய திருமாலைப் போல் தோன்றியது என்று கூறுகிருர் காஞ்சி புராணமுடையார். திருமாலின் நிறம் பற்றிய புதிய செய்தியொன்றை நமக்குத் தருகிருர் இவர்.

திருவிளையாடற் புராணம் அருளிய பரஞ்சோதி மாமுனிவர் வெள்ளை நீறணிந்த சிவபெருமான் மாதிரிப் புறப்பட்ட வெண்மேகம் நீரையுண்டு கரிய நிறமுடைய பார்வதி தேவி மாதிரித் திரும்பியது என்கிருர். நதியின் கதியில் தெய்வங்களைக் கண்டது மட்டுமல்லாமல், நம் கவிஞர் பெருமக்களுக்கு வேறு கற்பனைகளும் தோன்றுகின்றன.

மலை என்ற அரசன் நதி என்ற மகளைப் பெற்று கடலென்ற மணமகனுக்குத் திருமணம் செய்துகொடுத்துவிட்டானும். மலையின் மீது சூரியனது வெப்பம் தாக்குவது கண்டு, கடலரசன் ''நம் மாமன் வெப்பத்தால் மிக வருந்துகிருர். குளிர்ந்த நீரில் அவரை நீராடச் செய்தால் வெப்பம் தணியும்'' என எண்ணி, தன் தண்ணீரையே மேகமாக மாற்றி மலைச் சாரலுக்கு அனுப்பி மழை பெய்யச் செய்த மாதிரியிருந்தது என கடலுக்கும் மலைக்கும் உறவுண்டாக்கிப் பேசுகிருன் கவிச்சக்கரவர்த்தி.

பம்பி மேகம் பரந்தது பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை
நண்ணினுன்
அம்பின் ஆட்டுதும் என்றகன்
குன்றின் மேல்
இம்பர் வாரி எழுந்தது போன்றதே

என்பது கம்பன் பாடல்.

தெய்வ நிலைகளைக் கூறி, மாமன்-மருமகள் உறவு கூறிக் கடைசியில் உயர்ந்த அன்பான தாயன்பைக் காட்டுகிருன். ''கடவுள் ஒவ்வொரு இல்லத்திலும் தான் நேராக இருக்க இயலவில்லை. ஆதலால் ஒவ்வொரு வீட்டிலும் தாயென்ற ஒருத்தியைப் படைத்துத் தனது பிரதிநிதியாக அனுப்புகிருன்'' என்ருன் மேனாட்டு கவிஞன் ஒருவன். சரயுநதியானது பெற்ற தாயின் மார்பகம் போலிருந்தது. ''சரயுவன்னது தாய் முலையன்னது''. அன்னையின் மார்பு சுரந்து மக்களுக்குப் பாலளித்து வளர்ப்பது போன்று சரயு தன் நீர் வளத்தால் நாட்டு மக்களை வளர்த்ததாம். குழந்தை பிறக்கும் வரை பாலில்லாத அன்னையின் மார்பு குழந்தை பிறந்தவுடன் சுரந்து குழந்தை அமுதமுண்ணும் பருவத்தைக் கடந்தவுடன் மடிவற்றி விடுவதுபோல் அந்த நாட்டு மக்களுக்குத் தேவையானபோது வெள்ளத்தைக் கொண்டு வந்து அளித்து, வேண்டாதபோது வற்றிக் காட்டினுள் சரயுவான நதி என்னும் அன்னை என்பது குறிப்பு.

கல்லிலிருந்து இறங்கி வந்து கடலிலே கலந்தது நதி என்பது கம்பன் வாக்கு. எல்லா நதிகளும் அப்படித்தான். ஆனல் வைகைநதி மட்டும் கடலில் கலப்பதில்லை. வைகை என்னும் கங்காதேவி ''கடல் என் கணவனை சிவபெருமானுக்கு ஆலகால விஷத்தையளித்துக் கொல்லப் பார்த்தது. எனவே கடலில் கலக்கமாட்டேன்'' என்ருள். 'நாரியிடபாகருக்கு நஞ்சளித்த பாவி என வாரியிடம் புகாதவையை' என்பதுதனிப் பாடல். 'கடலில் கலந்தால் உப்பு நீராகி உலகுக்கு உபயோக மில்லாது போய் விடுவேன்.

(35-ம் பக்கம் பார்க்க)

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாச யோகம்

அத்யாயம் — 18.

பகுதி — 22.

கங்கைக் கரையில் அமர்ந்து முனிவர் ஒருவர் தியானம் செய்து கொண்டிருந்தார். தியானம் கலைந்து கண் விழித்ததும் எதிரில் நீர்ப்பிரவாகத்தில் ஏதோ ஒரு உயிர் கரையோரத்தில் வெள்ளத்தில் சிக்கித் தவிப்பதைக் கண்டார். முனிவரின் உள்ளம் அந்த உயிரைக் காப்பாற்றத் துடித்தது. உடனே அருகில் சென்று பார்த்தார். அது ஒரு தேள். எப்படியோ வெள்ளத்தில் சிக்கிக்கொண்டது. அதைக் காப்பாற்ற விருப்பம் கொண்ட முனிவர் அதைக் கருணையுடன் தம் கரங்களில் ஏந்திக் கரையில் விட்டார். தேள் அவரைக் கொட்டியது. அத்துடன் நில்லாமல் மீண்டும் நீரை நோக்கியே சென்று வெள்ளத்தில் மாட்டிக் கொண்டது. முனிவர் அதனது கொட்டுதலையும் பொருட்படுத்தாமல் திரும்பவும் அதைத் தம் கையிலேந்திக் கரையில் விட்டார். மீண்டும் தேள் அவரைக் கொட்டியது. இதை அருகிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த ஒருவன் முனிவரிடம், "முனிவரே தேளோ உம்மைக் கொட்டுகிறது. எதற்காக இந்த வீண் முயற்சி?" என்று கேட்டான். அதற்கு முனிவர் அமைதியாக, 'நண்பா, தேள் கொட்டுவதாகிய அதனது சுபாவத்தைக் காட்டுகிறது. பகுத்தறிவுடைய மனிதனாகிய நான் உயிர்களிடத்துக் கருணை காட்டுவதாகிய எனது சுபாவத்தை வெளிப்படுத்த வேண்டாமா?" என்று கேட்டார்.

இதைத்தான் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் மேற்கூறப்பட்ட சுலோகத்தில் விளக்குகிறார். நாம் ஒவ்வொருவரும் நமது சுபாவத்தால் இயக்கப்படுகிறோம். சத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களில் எந்த ஒன்று நம்மிடம் அதிகமாயிருக்கிறதோ அதற்கேற்ப நாம் செயல்படுகிறோம். சன்யாசி உடையில் வெளிவேஷத்தை நாம் மாற்றினால் மட்டும் போதாது. நமது சுபாவம் மாற வேண்டும். அப்பொழுதுதான் துறவுக்கும். நமக்கும் பெருமை உண்டு. திரும்பத் திரும்ப பகவான் கீதையில் பல இடங்களில் புறமாற்றத்தைக் காட்டிலும் அக மாற்றமே பன்மடங்கு சிறந்தது என்பதை வலியுறுத்துகிறார். ஆத்திர அவசரத்தால் மதிமயங்கி க்ஷத்திரிய சுபாவம் மேலோங்கிய அர்ஜுனன் காவிஉடை உடுத்துவானேயாகில், தன் வசமிழந்து காலக்கிரமத்தில் வில்லையும் அம்பையும் ஏந்தியவனாக வேட்டையாடவும் போர்புரியவும் தொடங்கி விடுவான் என்பதை பகவான் இங்கு மறைமுகமாகக் குறிப்பிடுகிறார். வினையின் வேகம் அவனை அவ்வாறு செய்யத்தூண்டும். அதனை முறையாகக் கையாளுதல் எப்படி என்பது அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

ஈச்வர : ஸர்வபூதாநாம்
ஹ்ருத்தேசே'ர்ஜுந திஷ்டதி |
ப்ராமயன் ஸர்வபூதாநி
யந்த்ராரூடாநி மாயயா ‖ (18 6)

"அர்ஜுனா! ஈசுவரன் உயிர்களையெல்லாம் உடல் என்னும் யந்திரத்திலேற்றி மாயையினால் ஆட்டிப் படைத்து அவைகளின் உள்ளத்திலிருக்கிறான்!"

இந்த உலகம் எப்படி இயங்குகிறது. நாமெல்லாம் எப்படிச் செயல்படுகிறோம் என்பது இந்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

பகவான் அர்ஜுனனுக்குத் தேரோட்டிய காட்சியே இந்தசுலோகத்திற்கு நல்ல விளக்கமாகிறது. ஒரு உபநிஷத மந்திரத்தை இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.

ஆத்மானம் ரதினம் வித்தி
சரீரம் ரதமேவ து |
புத்திம்து ஸாரதிம் வித்தி
மன : ப்ரக்ரஹமேவ ச ‖

'இந்த உடல்தேர்; ஆன்மா ரதத்தில் இருப்பவன்; அறிவு. தான் தேரோட்டி; மனம்தான் கடிவாளம்!' என்பது இதன் பொருள்.

பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் மலர்ந்த முகத்துடன் தேரோட்டுகிறார். அர்ஜுனன் பதைபதைப்புடன் போரில் ஈடுபடுகிறான். தேர் அங்கும் இங்கும் குதிரைகளால் இழுக்கப்பட்டு இயக்கப்படுகிறது. ரதமும் இயங்கியது. அர்ஜுனனும் போர்

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.Sc , M.Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

புரிந்தான். இயங்கியதைப் பற்றிய எந்தவிதமான உணர்ச்சியும் ரதத்திற்கு இல்லை. ஆனால் சண்டை செய்ததைப் பற்றிய உணர்ச்சி அர்ஜுனனுக்கு இருந்தது. உணர்ச்சியற்ற தேரை இயக்கியவர் ஸ்ரீ கிருஷ்ணர். இயக்கப்பட்ட அர்ஜுனன் தானே 'கர்த்தா' என்று எண்ணி மயக்கத்திற்கு உட்பட்டான். அனைத்துயிரினுள்ளும் உறையும் இறைவனே அனைத்தையும் இயக்குகிறார், நாம்

அனைவரும் வெறும் கருவி மாத்திரமே என்று உணர்வதுதான் உண்மை உணர்வாகும். உடல் யந்திரம்: அதை இயங்கும் சக்தியே இறைவன். அனைத்தும் மாயைக்கு உட்பட்டு இயங்குகின்றன. அனைத்தினுடைய ஹிருதய கமலவாசன் பகவான்.

இறைவனால் ஆட்டுவிக்கப்படும் உயிர்கள் எங்ஙனம் அமைதியை அடைவது என்ற கேள்விக்குரிய பதில் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

தமேவ சரணம் கச்ச
ஸர்வபாவேன பாரத |
தத்ப்ரஸாதாத்பராம் சாந்திம்
ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் ||
(18-26)

"அர்ஜுனா! எல்லாப் பாங்கினும் அவனையே சரணமடைவாயாக. அவனருளால் மேலாம் சாந்தியும் நிலையான வீடு பேற்றையும் பெறுவாய்."

நடுக்கடலில் கப்பல் ஒன்று சென்று கொண்டிருந்தது. கப்பலின் மேல் தளத்தில் பறவை ஒன்று அமர்ந்து கொண்டிருந்தது. திடீரென அது கரையை நாடி வடக்குப் புறமாகப் பறந்தது. கரையைக் காணாமல் திரும்பவும் கப்பலின் தளத்திற்கே வந்து சேர்ந்தது. மீண்டும் தெற்கு நோக்கிப் பறந்தது. கரையைக் காண முடியாமல் திரும்ப கப்பலுக்கே வந்தது. அவ்விதம் மீண்டும் மீண்டும் பல திசைகளிலும் பறந்து சென்று கரையைக் காண முடியாமல் கப்பலையே வந்து தஞ்சமடைந்தது.

அதுபோல மனிதர்களாகிய நாம் அமைதியையும், ஆனந்தத்தையும் நாடி எங்கெல்லாமோ செல்கிறோம், என்னவெல்லாமோ செய்கிறோம். ஆனால் நிலையான அமைதியையும், ஆனந்தத்தையும் எங்கும் எதிலும் காண முடியாமல் தடுமாறுகிறோம், திக்குமுக்காடுகிறோம். மேற்கொண்டு என்ன செய்வது, எங்குப் போவது என்பது தெரியாது அலைமோதுகிறோம்.

அத்தகைய நமக்கு பகவான் இந்த சுலோகத்தில் நிலையான அமைதி மற்றும் ஆனந்தத்தைப் பெறும் மார்க்கத்தைக் காட்டுகிறார்.

இறைவனை அடைந்தாலன்றி அதாவது நாம் எங்கிருந்தாலும் எதைச் செய்தாலும் சதா இறைவனை தஞ்சமடைந்திருந்தாலன்றி உண்மையான அமைதியும் ஆனந்தமும் கிட்ட வழியில்லை. பாண்டவர்கள், விதுரர், திரௌபதி, குசேலர், அனுமன், விபீஷணன், ஜடாயு போன்ற பக்தர்கள் இறைவனே தஞ்சம் என்றிருந்தனர். எனவே அவர்கள் நிலையான மன அமைதியைப் பெற்றனர். கைகேயி வாலி, ராவணன், கௌரவர்கள் போன்றோர் இறைவனை அடைக்கலம் புகவில்லை. எனவே தீராத துன்பத்திற்கும், பழிச்சொல்லுக்கும் ஆளாயினர்.

(தொடரும்

---

(31-ம் பக்கத் தொடர்ச்சி)

கடலுக்கு வெளியில் ஏதாவது ஓரிடத்தில் வேறு பெரிய நீர் நிலையில் கலந்தால் நாட்டிலுள்ள பயிர்களை வளர்க்க உதவ முடியும்' என்றே வைகை கடலில் கலக்கவில்லை என்கிறார் திருவிளையாடற் புராண முடையார். 'உடுத்த கடல் ஒருவருக்கும் உதவாத உவரி என 'மடுத்தறியாப் புனல் வைகை' என்றார். நதி கலங்கித் தெளிவதைப் பரஞ்சோதி "தெளிந்த புத்தி போல் பாண்டியநாட்டு நதி நீர் தெளிந்து காணப்பட்டது" என்கிறார். கம்பனோ தெளிந்த நீரோட்டம் பெரியோர்களின் தெளிவான கவிதை போன்றிருந்தது என்பதை 'சான்றோர் கவி எனக்கிடந்த' என்ற தொடர் மூலம் கூறுகின்றான்.

ஒரே பரம்பொருளின் சக்தி உலகிலுள்ள மக்கள் யாவருடைய உடம்பிலும் உயிர் என்ற பெயரால் நிறைந்து விளங்கியது போல 'ஓதிய உடம்பு தோறும் உயிரென உலாயது' என்று தண்ணீரை உயிராகவும் நாட்டை உடலாகவும் உவமித்துத் தண்ணீரின் பெருமையைக் கூறியருளினர்.

நதியோடும் அழகில் கடவுளரையும், அன்புத் தன்மையையும், சமரச மனோபாவத்தையும் நல்லன எல்லாவற்றையும் காட்டினர் நம் கவிஞர் பெருமக்கள். இயற்கையை உன் ஆசிரியனாகக் கொள் Let Nature be your Teacher என்று ஆங்கிலக் கவிஞன் வேர்ட்ஸ்வொர்த் (Wordsworth) தின் வாக்கை மெய்ப்படுத்துகின்றனர்.

நாட்டிலே நல்லனவே காணும்படி நமக்கு அருளும் நற்கவிஞர்களைப் போற்றி அவரது வழி நடந்து வாழ்வோமாக! ※

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

இடத்தைச் சொல்லி, அதற்குரிய ஒரு பூரண நட்சத்திரத்தையும் காட்டி நமது ஜீவனம் நன்றாக ஏற்படப் பத்தாம் இடத்தைச் சுட்டிக்காட்டிப் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதனே என்றார்.

திருமாலின் திருநட்சத்திரத்தைக் காட்டிய பணி மேலே தொடருகிறது.

திருமாலின் திருநட்சத்திரத்தைக் காட்டிய ஆழ்வார் திருவவதாரம் செய்தது இக்கலியுகத்தில்.

எடுத்துச் சொன்ன அவதார நிகழ்ச்சி முன்சென்ற துவாபரயுகத்தில்.

எதற்காக கண்ணனை வைத்து திருநட்சத்திரத்தைக் காட்ட வேண்டும் என்ற நியாயமான கேள்வி உதிப்பதில் தவறில்லை. அதுவும் ஆழ்வாரின் ஆராய்ச்சிப் புலமையைப் புலப்படுத்துகிறது.

ஆழ்வார் காட்டிய திருநட்சத்திரங்களுக்குரிய இராசிகள் ரிஷபம்-கன்னி-மகரம் ஆகும்.

துவாபர யுக கதாநாயகனை கண்ணன் எப்போதும் மாட்டுக் கூட்டங்களிடையே காணப்பட்டான். மாடு மேய்க்கும் கண்ணன் அவன். ரிஷப ராசியில்-ரிஷபம் என்ற மாட்டுச் சின்னத்தைப் போட்டு ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் காட்டியிருப்பார்கள். மாடுகளைக் காத்து ரக்ஷிக்கும் கண்ணனாகவே இருந்தான் என்பதற்காகவே ரிஷப ராசியைக் காட்டும் எண்ணத்தில் அதற்குரிய 'ரோகிணி' திருநட்சத்திரத்தை எடுத்துக் காட்டினார்.

கோபியர் கொஞ்சும் ரமணன் எப்போதும் கன்னிப் பெண்களிடத்தில் காணப்பட்டான் என்பதைக் காட்டவே கன்னிப் பெண்களைப் போட்டுக் காட்டிய இராசியான கன்னியையும் காட்டி, அதற்குரிய அந்த நட்சத்திரத்தையும் காட்டினார்.

குழலூதும் கண்ணன், தனது இனிய வேணு கானத்தால் எல்லோரையும் மயக்கி வந்தான். மகரயாழின் ஓசை மயங்க வைப்பது போல, மாதவனின் குழலோசையும் இருந்தது என்பதைக் காட்டவே 'மகர' இராசியைக் கொண்டு திருவோணத்தை எடுத்துக் காட்டினார்.

கணித அறிவு, ஜ்யோதிஷப் பாண்டியத்யம் போன்றவற்றை மிக நுட்பமாக எடுத்துக் காட்டிய புலமை மேலும் ஆராய்ச்சி செய்தால் புலப்படும். அதையும் சற்று விரிவாகப் பார்ப்போம்.

வங்கக் கடல் கடைந்த சமயம் அமிர்தம் வெளிப்பட்டது. அப்போது தேவர்களுக்கும் - அசுரர்களுக்கும் போட்டியும் ஏற்பட்டது. இந்நிலையில் கண்ணன் 'மோஹினி' அவதாரத்தை எடுத்து தாயார் ஸ்தானத்தில் அமர்ந்து கொண்டு வெளிப்பட்ட அமிர்தத்தைப் பங்கிட்டுக் கொடுத்தார்.

ஜ்யோதிஷ சாஸ்திரத்தில், தாயாரின் ஸ்தானமாக நான்காம் இடமான கடக இராசியைச் சொல்வதுண்டு. அந்த இராசிக்குரிய கிரஹம் 'சந்திரன்' ஆகும். சந்திரன் தாயாருக்குரிய கிரஹம். ஒருவருடைய ஜனன காலத்தில் சந்திரனின் மகாதிசை பத்து வருடங்கள் நடைபெறும். ரோகிணி - அஸ்தம் - திருவோணம் ஆகிய மூன்று திருநட்சத்திரங்களுக்கும் உரிய கிரகம் சந்திரன் ஆகும்.

எனவே ஆழ்வார் காட்டிய திருநட்சத்திரங்களின்படி சந்திர மகாதிசைக்குரிய நட்சத்திரம் ரோகிணி-அஸ்தம்-திருவோணம் ஆகும். சந்திர மகா திசைக்குரிய மொத்த வருடங்கள் பத்து. ஆழ்வாரின் அமுத வாக்கில் உதயமான சொல் - அத்தத்தின் பத்து ஆகும்.

இப்படியாக ஆழ்வாரின் அமுத மொழி-அவரது திருமொழியில் தெரிகிறது.

திருமாலின் திருநட்சத்திரம் அத்தத்தின் பத்தாம் நாளில் அறிய முடிகிறது.

சந்திரனுக்குரிய திருத்தலம் 'திரு வேங்கட மலை'. திருவேங்கடமுடையானுக்குரிய திருநட்சத்திரம் திருவோணம் ஆகும். தேவ கணம் கொண்ட திருநட்சத்திரம் ஆகும்.

அத்தகிரியில் தோன்றிய வரதனுக்குரிய திருநட்சத்திரம் அத்தம் என்ற அஸ்தமாகும். தேவகணம் கொண்ட திருநட்சத்திரமாகும்.

தேவகி வயிற்றில் பிறந்த கண்ணன் கலியுகத்தில் (கலியில்) நின்ற இடம் திருவல்லிக்கேணி. ஸ்ரீ வேங்கட கிருஷ்ணனாக சேவை சாதிக்கிறார். அவரது திருநட்சத்திரம் ரோகிணி. மனுஷ்ய கணம் கொண்ட திருநட்சத்திரம்.

இப்படியாகத் திருமாலின் திருநட்சத்திரத்தை மிகவும் நுணுக்கமாக-இரத்தினச் சுருக்கமாகச் சொன்ன பெரியாழ்வார், நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் முதல் இடம் வகிப்பதில் வியப்பொன்றுமில்லைதான்.

*

# கிருபை

கிருபை என்பது எப்போதும் உள்ளூர இருப்பதாயினும் பகவானை நாம் சதா சிந்திப்பதால்தான் அதை உணர முடியும். பூவுக்கு மணம் உண்டு எனினும் நாம் அதை மூக்கின் அருகு எடுத்து வந்தால் தானே வாசனை தெரிகிறது? சந்தனத்தின் மணத்தை இழைத்துப் பார்த்தால்தானே அறிய முடிகிறது?

— அன்னை ஸ்ரீ சாரதாதேவி.

அனுப்பியவர் : கமலா மாரியப்பன்.

# இறைவன் எல்லோரையும் சமமாகப் பார்க்கின்றான்

**தூ**ய மனம் என்னும் பெருஞ்சுனையில் பூக்கும் இதயமலர் ஒன்றுதான் இறைவனுக்குரியதாகும் என்று கீதை தெளிவாகக் கூறுகிறது. அதனால் தான் கண்ணன் அர்ச்சுனனைப் பார்த்து; "என் அன்பிற்குரிய மைத்துனா! நீ எந்தவேலையில் ஈடுபட்டிருந்தாலும், நீ எதைக் கொடையாகக் கொடுத்தாலும், எதை உண்டாலும், அதை எனக்குக் காணிக்கையாக்கிச் செய். அத்தகைய பணிகள்தாம் என்னை வந்தடைகின்றன. எனக்கு எந்த குறிப்பிட்ட பெயரிலும் தனி விருப்பம் கிடையாது. எல்லாப் பெயர்களும் என் பெயர்களே.


டாக்டர் பா. இராஜாராம், Ph.D.
கோயம்புத்தூர்.


எனக்கு நண்பனுமில்லை பகையுமில்லை. நான் ஒரு சாட்சியாக மட்டுமே இருக்கின்றேன். எனக்குப் பணி செய்து அதனால் இன்பம் பெறும் எல்லோரிடத்திலும் நான் வசிக்கின்றேன்" என்று சொன்னான்.

இவை அர்ச்சுனனுடைய மனத்திலே பல ஐயங்களைக் கிளப்பின. அர்ச்சுனன்:

"கண்ணா! நீ யாதொரு வேற்றுமையும் பார்ப்பதில்லை என்றும், உனக்கு நட்பும் இல்லை பகையுமில்லை என்றாய் அப்படியானால் சிலர் மகிழ்ச்சியோடும் சிலர் துயருற்றும் இருப்பதேன்?

சிலர் உடலாலும் உள்ளத்தாலும் வலியவர்களாக இருக்கிறார்கள். சிலர் நலிந்து நோயுற்று எளியவர்களாகயிருக்கிறார்கள். சிலர் சீமான்களாகவும், பலர் ஏழைகளாகவும் இருப்பது எவ்வாறு?

இவை ஏன்? காரணங்கள் தான் என்னவோ?

நீயே எல்லா வேற்றுமைகளுக்கும் அப்பாற்பட்டு நிற்கும் பொழுது எல்லோரையும் சம நிலையில் ஏன் நீ வைக்கக்கூடாது? இருக்கிற நிலவரத்தைப் பார்த்தால் எல்லோரையும் நீ வேற்றுமையின்றிப் பார்க்கிறாய் என்பதை நம்புவதுகூட கடினமாக இருக்கிறது."

அர்ச்சுனனை வாட்டிய இந்த ஐயங்களைக் கேட்டு கண்ணன் நகைத்துவிட்டுச் சொல்லுவான்:

நான் உண்மையைத்தான் சொல்லுவேன். நீ ஒப்புக் கொள்வாயோ மாட்டாயோ, என என் பேச்சைமாற்றமாட்டேன். நீ ஒப்புக்கொள்வதால் உனக்கு மகிழ்ச்சியுமில்லை, நீ நிராகரித்தால் நான் தொய்ந்து போவதில்லை.

"நான் எல்லாவற்றிலும் ஒரே சீராக இருக்கிறேன். ஆனால் எல்லாம் என்னிடம் ஒரே சீராக இருப்பதில்லை. குளிர் காலத்தில் கிராம மக்கள் நெருப்பை மூட்டி அதைச் சுற்றி அமர்ந்திருப்பதை நீ பார்த்திருப்பாய். நெருப்பின் அருகில் அமர்ந்திருப்பவர்கள்தான் அதன் சூட்டில் குளிர்காய்வார்கள். வெகு தொலைவில் உட்கார்ந்திருப்பவர்கள் குளிருடன் இருட்டையும் பொறுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. இப்படித் தொலைவில் உட்கார்ந்து கொண்டு 'எனக்குக் குளிர்காய முடியவில்லையே! இருட்டிலே இருக்கிறேனே!' என்று யாராவது சொன்னால், அதனால் நெருப்பு ஒருதலை பக்ஷமாக நடந்து கொள்கிறது எனச் சொல்லமுடியுமா?

மக்களை வேறுபடுத்தி நெருப்பு அவர்களிடையே வேற்றுமை பாராட்டுகிறது என வாதிடுவது பொருளற்றதன்றோ!

மெய்ப் பொருட்காட்சியும் ஒளியும் இதைப் போன்றதுதான். அவை உங்களுக்குக் கிடைக்கவேண்டுமானால் அதை அணுகி அதனிடத்திலேயே தங்க வேண்டும்.

நெருப்பை எரியவிட்டு அதனிடம் குளிர்காய்வதற்கு எல்லோருக்கும் சம உரிமை உண்டு. நெருப்புக்கு ஓரவஞ்சனை கிடையாது.

என்னை உணர்ந்து, என்னிடமிருந்து பேரின்பத்தைப் பெறுவதற்கு எல்லோருக்கும் சமமான வாய்ப்புக்களும் உரிமைகளும் உண்டு. வேற்றுமையும் பிரிவுகளும் சாதகர்களுடைய பிழைகளால் உண்டாகின்றன. அவை என்னிடத்திலுள்ள குறைகளல்ல."

கண்ணனுடைய கனிவு மிக்க மொழிகளைக் கேட்டோமல்லவா? கருணை மழையைக் கண்டோமல்லவா? அவனுடைய சொற்களில்தான் எவ்வளவு உண்மை! பார்க்கப்போனால் மனிதர்கள் தம்மிடமிருக்கும் குறைகளை உணர்வதில்லை. பிறர் குறைகளைத்தான் பார்க்கின்றார்கள். இறைவனிடத்திலே குற்றமிருக்குமானால் உலகம் எப்படி இருக்கும்? எப்படி பிழைக்கும்?

**இறைவன் எல்லோரையும் சமமாகப் பார்க்கிறான்.**

அவனது இதயம் எல்லோரையும் தனது அன்பினால் அணைக்கின்றது. இதன் காரணமாகத்தான் உலகில் இந்த அளவிலாவது அமைதியும் வளமையும் இருக்கின்றன.

நோயாளிக்கு ஆறுதல் சொல்லுவதற்காகவே அவனுக்குக் காய்ச்சல் இல்லை என மருத்துவர் அறிவிக்கக் கூடும். ஆனால் உஷ்ணமானி பொய் சொல்லாது. உள்ளார்ந்த உணர்வினைத் தெரிந்து, அதற்கேற்ப இறைவன் செயல்படுகிறான், வெளித்தோற்

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | |
|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை—சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, —சுத்தி, ஏகாந்தசேவை |

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | |
|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

றத்தினலல்ல. அவனிடத்து தவறு ஒரு போதும் நேராது. அவனை ஏமாற்றவும் முடியாது.

உலகமோ இதற்கு மாறாக வெளித் தோற்றத்தையே மதிக்கிறது. அதையே நம்பி அதன் வழியே செல்கின்றது.

ஆற்றில் இறங்கினால்தான் அது எத்தனை ஆழம் என்று தெரியும். சாப்பிட்டால்தான் சுவை தெரியும். ஆற்றிலே இறங்காமல் ஆழத்தைப் பற்றியும், சாப்பிடாமலே சுவையைப் பற்றியும் பேசினால் அவற்றின் உண்மைகளை எவ்வாறு ஏற்க முடியும்?

இறைவனே ஓரவஞ்சனையினால் தீண்டப்பட்டால் ஆயர்பாடி இடைச்சிகளுக்கு "சாயுஜ்யம்" என்னும் இன்பத்தை எப்படிஅவன்அளித்திருக்க முடியும்?

சபரியினால் சுவைக்கப்பட்டு எச்சிலான மீதிப்பழத்தை அவன் சாப்பிட்டிருப்பானா?

நந்தனார் இறைவனது மாட்சியைக் கண்டிருக்க முடியுமா?

பிரஹ்லாதனும் விபீஷணனும் இறைவனை அடைந்திருக்க முடியுமா?

ஸ்ரீராம தூதனாக அனுமான் ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பானா?

இவைகளெல்லாம் இறைவனிடத்து ஓரவஞ்சனையைக் காண்பிக்கின்றனவா அல்லது ஓரவஞ்சனை இல்லை என்பதனை நிரூபிக்கின்றனவா?

இவைகள் யாவும் அவனது பிரேமைக்கும், சீரான கருணைக்கும் எடுத்துக்காட்டுக்களாக உள்ளன.

"மன் மனா பவ மத் பக்த:
மத் யாஜீ மாம் நமஸ்குரு!"

(ஸ்ரீகீதை)

"உங்கள் மனத்தை என் மேல் நிலைக்கச் செய்யுங்கள். என்னிடம் பக்தியோடு இருங்கள். உங்கள் எண்ணங்களை, சொற்களை, செயல்களையெல்லாம் என்னிடத்தில் ஒப்புவித்து விட்டு என்னை வணங்குங்கள்; உறுதியாக என்னை நேசியுங்கள்" என சமநோக்குடன் நமக்குக் கண்ணன் ஆணையிடுகிறான்.



# அன்று... அங்கு!

திரு. ஆர். சுப்பராவ் - திருக்கோவலூர்.

தென்னகத்தில் இஸ்லாமிய ஆட்சியைப் பரவவிடாமல் தடுத்திடவும் இந்து மதம், இந்துக் கோயில்கள், கலாசாரங்கள் ஆகியவைகளைக் கட்டிக் காத்திடவும் தோன்றியது விஜய நகரப் பேரரசு. துங்கபத்ரா நதிக் கரையில் ஆனேகுந்தி என்ற நகரில் முஸ்லீம் அரசின் கீழ் பணியாற்றிக் கொண்டிருந்த ஹரிஹரன்—புக்கன் என்ற சங்கம வமிசத்து சகோதரர்கள் முதலில் சங்கநாதம் முழங்கினார்கள். சிருங்கேரி மடத்தின் இருபத்தி இரண்டாவது குருவாக அன்று விளங்கிய ஸ்ரீ வித்யாரண்யர் என்ற சங்கராச்சாரியார் அவர்களின் ஆசிகளையும் ஆலோசனைகளையும் பெற்று விஜயநகரத்தில் தனி ஆட்சி அமைத்தார்கள். சனாதன தருமம் என்ற உறுதியான தளத்தின் மீது அது அமைந்தது. அந்நகர் வித்தியாநகர் என்றே ஸ்ரீ வித்யாரண்யரின் பெயர் சூட்டப்பட்டது. அது விஜயநகரம் என்று காலப்போக்கில் மாறி விட்டது. விருபாக்ஷி நகரம், ஹம்பி என்ற வேறு பெயர்களும் அது கொண்டது. ஸ்ரீ வித்யாரண்யர் அவர்களின் ஆலோசனையின்படி ஹம்பியில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ விருபாக்ஷீஸ்வரருக்கு விஜயநகர ஆட்சி அர்ப்பணம் செய்யப்பட்டது. ஈசனின் பிரதிநிதியாக இருந்து ஹரிஹரன் நாட்டை அரசாண்டார். புக்கன் அமைச்சரானார். நாட்டின் வலிவும் பொலிவும் வளர்ந்தன. கி. பி. 1386ல் ஸ்ரீ வித்யாரண்யர் ஹம்பியில் மறைந்தார். ஹம்பி (விருபாக்ஷ) ஈஸ்வரன் கோயில்மேல் தளத்தில் ஸ்ரீ வித்யாரண்யருக்கு கோயில் அமைக்கப்பட்டது.

விஜயநகரப் பேரரசை சங்கம, சாளுவ, துளுவ, அரவீடு என்ற நான்கு அரச குலத்தைச் சேர்ந்தவர்கள் தொடர்ந்து ஆண்டு வந்தார்கள். விஜயநகரப் பேரரசு ஸ்ரீ வித்யாரண்யர் காலத்துக்குப் பிறகும் தவவலிமையும் பெரும் புகழும் கொண்ட ஸ்ரீ வியாசராஜர் அவர்களின் ஆசியும் ஆதரவும் பெற்றுத் திகழ்ந்தது. ஸ்ரீ மத்வாச்சாரியார் அவர்களின் குருபரம்பரையைச் சேர்ந்த பீடாதிபதி அவர். விஜயநகரப் பேரரசின் வலிமையையும் வளத்தையும் மிக உன்னத நிலைக்கு உயர்த்திய மாமன்னன் கிருஷ்ண தேவராயன் ஸ்ரீ வியாசராஜரை குலதெய்வமாகவும் ராஜகுருவாகவும் கொண்டார்.

நாட்டைச் சுற்றிலும் சூழ்ந்துள்ள பகை அரசர்களை போரில் வென்று (அம் மாமன்னர்) பல வெற்றிகளைக் குவித்தார். ஒவ்வொரு வெற்றிக்குப் பிறகும் திருமலை ஸ்ரீ வெங்கடேசனை சென்று வணங்கி ஏராளமான நன்கொடைகளைக் கோயிலுக்கு அளித்தார். இவ்வாறு ஏழு முறை ஏழுமலையான் கோயிலுக்குச் (அவர்) சென்று வந்தார். தன்னுடைய அரசிகளுடன் கிருஷ்ணதேவராயன் செப்புத் திருமேனியில் அங்கு இன்றும் காட்சி அளிக்கிறார்.

அப்பேரரசு தன் அரசு முத்திரைகளில் 'ஸ்ரீ விருபாக்ஷ' என்ற பெயரையும் பின்பு "ஸ்ரீ ராம்" என்ற பெயரையும் கொண்டு விளங்கின. நாணயங்கள் கணேசர், ஆஞ்சநேயர், கருட பகவான், நந்தி பகவான் போன்ற தெய்வ உருவங்களைத் தாங்கி வெளிவந்தன.

மாமன்னன் கிருஷ்ணதேவராயனுக்கும் அவரது பேரரசுக்கும் கி. பி. 1520 ஆண்டில் நேரிடவிருந்த குஹு யோகம் என்னும் பேர் அபாயத்தை ஸ்ரீ வியாசராஜர் தனது தவ வலிமையால் தடுத்து நிறுத்தினார். பண்டரீபுரம் ஸ்ரீ பாண்டுரங்கன்கோயில் முஸ்லீம் அரசனின் படையெடுப்புக்கு உள்ளானபோது ஸ்ரீ பாண்டுரங்கனை விஜயநகரம் கொண்டு சென்று பாதுகாத்தார். மீண்டும் பண்டரீபுரம் சென்று பிரதிஷ்டைச் செய்தார்.

கி. பி. 1513ம் ஆண்டில் நடைபெற்ற போரில் கஜபதி மன்னனை வென்றார். அவ் வெற்றியின் நினைவாக உதயகிரி நகரிலிருந்து கொண்டுவந்த ஸ்ரீ கிருஷ்ண விக்ரஹத்தை ஹம்பியில் அமைத்து ஆலயம் எழுப்பினார்.

தன்னுடைய பணிகளை முடித்து விட்டு ஸ்ரீ வியாசராஜர் தனது 92-வது வயதில் துங்கபத்ர நதிக் கரையில் ஹம்பிக்கு அருகில் உள்ள ஆனேகுந்தி என்னும் தலத்தில் (கி. பி. 1538ம் ஆண்டில்) முக்தி அடைந்தார். அங்கு விளங்கும் நவ பிருந்தாவனங்களில் ஒன்றாக அமைந்த அவருடைய பிருந்தாவனம் ஒளி வீசிக் கொண்டிருக்கிறது. பக்தர்களுக்கு அருள்பாலிப்பதில் தன்னிகர் அற்று (அவர்) இன்று விளங்குகிறார். ஹம்பி நகரம் இராமாயண காலத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. வாலி, சுக்கிரீவன், ஹனுமன் முதலிய வானர வீரர்கள் வாழ்ந்த வனம் அது. இன்று அங்குப் பெரும் அளவில் காணப்படும கருங்குரங்குகள் அவ்வானர வீரர்களின் வழித் தோன்றல்களாய் அங்குள்ள மக்கள் கருதுகிறார்கள். ஆங்காங்கு சிதறிக் கிடக்கும் கற்பாறைகளை இலங்கைக்குச் செல்ல இராமர் அணைகட்டிய போது வானரங்களால் கொண்டு

(அடுத்தப் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்

लक्ष्मीनिवास निरवद्यगुणैकसिन्धो
संसारसागरसमुत्तरणैकसेतो ।
वेदान्तवेद्यनिजवैभव भक्तभोग्य
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

லக்ஷ்மீநிவாஸ நிரவத்யகுணைகஸிந்தோ
ஸம்ஸார ஸாகர ஸமுத்தரணைகஸேதோ |
வேதாந்தவேத்ய நிஜவைபவ பக்தபோக்ய
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :—லக்ஷ்மீ நிவாஸ=திருமகள் உறைவிடமே! நிரவத்ய=குற்றமற்றவனே! குண ஏக ஸிந்தோ=குணங்களுக்கு (உறைவிடமான) ஒப்பற்ற கடலே! ஸம்ஸார ஸாகர ஸமுத்தரண ஏக ஸேதோ= பிறவிக்கடலைக் கடத்தற்குரிய ஒப்பற்ற பாலமே! வேதாந்த வேத்ய நிஜ வைபவ=உபநிஷத்துக்களால் அறியக் கூடிய தன் வைபவத்தை யுடையவனே! பக்த போக்ய=அன்பர்க் கினியனே (அன்பர்களை இனியராய் உடையவனே!) ஸ்ரீ வேங்கடாசலபதே= திருமலைநாதனே! தவ ஸுப்ரபாதம்=உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :—பக்தர்கள் உன்னைப் போக்யமாய் அனுபவிப்பது போல நீயும் அவர்களைப் போக்யமாய் அனுபவிப்பவனுதலின் துயிலெழுந்து வாயிலில் காத்திருக்கும் பக்தர்களை அருளுக.

குறிப்பு :—நீர் அவத்ய, குணைகஸிந்தோ—கடவுளிடத்தில் ஒரு குற்றமும் இல்லை. குணங்கள் எல்லாம் உள்ளன. குற்றமின்மை (கல்யாண) குணங்கள் நிறைந்திருக்கை என்ற இவ்விரண்டும் உபய லிங்கம் என்று கூறப்படும்.

इत्थं वृषाचलपतेरिह सुप्रभातम्
ये मानवाः प्रतिदिनं पठितुं प्रवृत्ताः ।
तेषां प्रभातसमये स्मृतिरङ्गभाजां
प्रज्ञां परार्थसुलभां परमां प्रसूते ।।

இத்தம் வ்ருஷாசலபதேரிஹ ஸுப்ரபாதம்
யே மாநவா: ப்ரதிதிநம் படிதும் ப்ரவ்ருத்தா: |
தேஷாம் ப்ரபாதஸமயே ஸம்ருதிரங்கபாஜாம்
ப்ரஜ்ஞாம்பரார்த்தஸுலபாம் பரமாம்ப்ரஸூதே ||

பதவுரை :—இஹ=இந்நிலவுலகில்; வ்ருஷாசல பதே: = திருமலைநாதனுடைய, ஸுப்ர பாதம்=திருப்பள்ளியெழுச்சியை; ப்ரதி திநம்=தினந்தோறும்; யே=எம்; மாநவா:=மனிதர்; ப்ரபாத ஸமயே=காலை வேளையில்; இத்தம்=இவ்வாறு (இதுவரை கூறியவாறு); படிதும்=பாராயணம் செய்வதற்கு; ப்ரவ்ருத்தா:=இழிகின்றனரோ; தேஷாம்= அவர்களைப்பற்றிய; ஸ்ம்ருதி: = நினைவு; அங்க பாஜாம்=மனிதர்களுக்கு; பரார்த்த ஸுலபாம்:= பரம்பொருளையே பயனுகக் கருதியவர்கள் மாத்திரமே எளிதில் அடையக் கூடிய; பரமாம்=உத்தமமான; ப்ரஜ்ஞாம்=நல்லறிவை; ப்ரஸூதே=பயக்கிறது.

கருத்துரை :—தினந்தோறும் காலை வேளையில் இத் திருப்பள்ளியெழுச்சியைப் படிப்பவர்களை நினைப்பவர்களும் பரம்பொருளைப்பற்றிய நல்லறிவைப் பெறுகின்றனர்.

ஸ்ரீவேங்கடேசஸ்தோத்ரம் அடுத்தஇதழில்வெளியிடப்படும்.

---

வரப்பட்டவைகள் என்றும் அவர்கள் கூறுகின்றனர். பேரரசின் ஆட்சிப் பரவிய இடங்களிலெல்லாம்ஸ்ரீவியாச ராஜர் ஹனுமனுக்கு கோயில்கள் அமைத்தார். எழுநூறுக்கும் மேற்பட்ட கோயில்கள் எழுந்தன. அவைகளில் அவர் அமைத்த முதல் கோயில் ஹம்பி நகரில் துங்கபத்ர சக்கரதீர்த்தம் அருகில் குன்றின் மீது அமைந்த ஸ்ரீ எந்திரோத்தார ஹனுமான் கோயிலாகும்.

அப் பேரரசு, மன்னன் சதாசிவ ராயர் காலத்தில் வலிமை குன்றி தக்காணப் படையெடுப்பைத் தாங்க முடியாமல் தலை சாய்ந்தது. ஹம்பி நகரம் அலங்கோலமாயிற்று. ஆயினும் ஸ்ரீ வித்யாரண்யர், ஸ்ரீ வியாச ராஜர் ஆகிய மகா புருஷர்களின் சாதனைகளும் போதனைகளும் இன்றும் உயிர் துடிப்புடன் விளங்குகின்றன. இந்து தருமம் என்ற பூந்தோட்டத்தில் அன்று மலர்ந்த மலர்களின் நறுமணத்தையும், பாரதப் பண்பாடு என்ற கனித் தோட்டத்தில் அன்று கனிந்த கனிகளின் இன்சுவையையும் இன்றும் நாம் நுகர்ந்து இன்புற முடியும், சுவைத்து மகிழ முடியும்.



# யமுனைத்துறைவர்

மாருதிதாசன் — காஞ்சிபுரம்.

திருநெறியாம் வைணவ நெறியின் ஆச்சார்யருள் தலைவரெனப் போற்றப்படும் நாதமுனிகளின் திருக்குமாரர் ஈசுவர பட்டாழ்வார். இவரை ஈஸ்வர முனிகள் என்றும் அழைப்பர். ஈஸ்வர முனிகளுக்குத் தாது வருஷம் ஆடி மாதம் பௌர்ணமி வெள்ளிக்கிழமை உத்தராட நட்சரத்தன்று திருக்குமாரர் ஒருவர் திருஅவதாரம் செய்தார். இச்செய்தியைக் கேட்ட மணக்கால் நம்பிகள் பெரிதும் மகிழ்ந்தார். ஈஸ்வர முனிகளைக் கொண்டு செய்ய வேண்டிய சுபநிகழ்ச்சிகள் அனைத்தையும் செய்வித்தார். நாதமுனிகளின் நியமனப்படி 'யமுனைத் துறைவர்' என்னும் பெயரிட்டு மகிழ்ந்தார்.

யமுனைத் துறைவர் வளர்பிறைச் சந்திரனைப் போல மிக்க வனப்புடனும், அறிவாற்றலுடனும் வளர்ந்து வந்தார். இவர் அறிவாற்றலைக் கண்டு இவரின் ஆசிரியர்களும் வியப்படைந்தனர். பின்பு இவரின் திருத்தகப்பனாரான ஈஸ்வர முனிவர் திருநாட்டுக்கெழுந்தருளினார். யமுனைத்துறைவர் தம் தந்தையாருக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்கள் அனைத்தையும் குறைவறச் செய்து முடித்தார். மகாபாஷ்ய பட்டர் என்னும் ஆசிரியரிடத்தில் நூல்கள் பலவற்றையும் கற்றுத் தேர்ந்தார்.

அக்காலத்தில் சோழமன்னன் அவைக்களப் புலவராக ஆக்கியாழ்வான் என்பவர் தன்னிகரற்று விளங்கி வந்தார். தன் நாட்டிலுள்ள புலவர்களையெல்லாம் தன் வாதத்திறமையினால் வென்று தனக்குக் கப்பம் கட்டுமாறு பணித்து வந்தார். மகாபாஷ்ய பட்டரிடத்திலும் கப்பம் வாங்கி வரத் தம் சேவகன் ஒருவனை அனுப்பினார்.

மகாபாஷ்ய பட்டரிடத்தில் கையில் காசொன்றுமில்லை. எனவே, வந்த சேவகனுக்கு என்ன சொல்வதென்று அறியாது மனம் நொந்தார். இந்நிலையில் யமுனைத் துறைவர் அங்கே வந்து சேர்ந்தார். அந்தச் சேவகன் கொண்டு வந்த கடிதத்தைக் கிழித்தெறிந்தார். இச்செய்தியை ஆக்கியாழ்வானிடம் சென்று அந்தச் சேவகன் அறிவித்தான்.

தன் கடிதத்தைக் கிழித்தெறிந்தவன் "வெறும் புலவனா? நூல்களில் வல்லவனா?" எனத் தெரிந்து வருமாறு சேவகனை ஆக்கியாழ்வான் மீண்டும் அனுப்பி வைத்தான். வந்த சேவகனிடம் "நாம் வெறும் புலவனும் அல்லோம்! வெறும் நூல்களைக் கற்றவனும் அல்லோம்! வாதம் செய்ய வருகின்ற மதயானைகளின் செருக்கை அடக்க வல்ல சிங்கம் யாம்!" எனப் பொருள்படும் சுலோகம் ஒன்றை எழுதிக்கொடுத்து அந்தச் சேவகனைப் போக விட்டார். இதைப் படித்துப் பார்த்த ஆக்கியாழ்வான வியப்படைந்து இச்செய்தியை அரசனுக்கறிவித்தான்.

யமுனைத் துறைவரைத் தம் அரசவைக்கு வருமாறு அரசன் கட்டளை பிறப்பித்தான். யமுனைத் துறைவரும் வந்து சேர்ந்தார். தம் அரசவைப் புலவருடன் வாதம் செய்யச் சம்மதமா? என்று மன்னன் கேட்டான். நடுவராக இருக்கப் புலவர்களைத் திரட்டினால் தாம் வாதம் செய்யத் தயாராக இருப்பதாக யமுனைத் துறைவர் கூறினார்.

அரச சபை கூடியது. புலவர்கள் பலரும் திரண்டனர். அரசனும், அரசியும் வந்தமர்ந்தனர். யமுனைத்துறைவரின் முகத்தில் அறிவொளி வீசுவதை அரசி கண்டாள். எனவே, 'இவர் வாதத்தில் தோற்கமாட்டார்' என்று அரசனிடம் கூறினாள். தன் அவைப் புலவன் தோற்க மாட்டான் என்றும், முடிவில் வெற்றி பெறுபவர்க்குத் தன் அரசில் பாதி தருவதாகவும் அரசன் அரசியிடம் உறுதி கூறினான்.

வாதப்போர் தொடங்கியது. "நீர் ஆம் என்பதை நான் அல்ல என்பேன்! அல்ல என்பதை ஆம் என்பேன். தோற்றவர் தலையில் வென்றவர் தம் கால்களை வைக்க வேண்டும்!" என்று ஆக்கியாழ்வான் நிபந்தனைகளை விதித்தார்.

உடனே யமுனைத் துறைவர் மூன்று தொடர்களைக் கூறினார்.

"உன் தாயார் மலடியல்லள்!", "இம்மன்னன் உலகம் முழுவதையும் ஆள்பவன்!", "இவ்வரசி கற்புடையவள்!" இவற்றைக்கேட்ட ஆக்கியாழ்வான் பதில்கூற முடியாமல் தலை குனிந்து நின்றான்.

முதல் தொடரை மறுக்க வேண்டுமானால், "என் தாய் மலடியே" என்று கூற வேண்டும். இரண்டாம் தொடரை மறுக்க வேண்டுமானால், அரசன் கோபத்துக்கு ஆளாக வேண்டும். மூன்றாம் தொடரை மறுத்தால், அரசியால் மரண தண்டனை கிடைத்தாலும் கிடைக்கும்.

நிபந்தனைப்படித் தான் தோற்றதாக ஒப்புக்கொண்ட ஆக்கியாழ்வான் தன் தலைமேல் வைக்குமாறு யமுனைத் துறைவரைக் கேட்டான். அரசவைப் புலவனாகவும் வயது மூத்தவனாகவும் உள்ளதால் தம்மால் அவ்வாறு செய்ய முடியாது என்று யமு

ளைத் துறைவர் மறுத்தார், இதைக் கேட்ட புலவர்கள் அனைவரும் மகிழ்ந்தனர். யமுனைத்துறைவரைப் பெரும் பல்லக்கு ஒன்றில் அமரச் செய்து சிறப்புச் செய்தனர்.

அரசியின் கூற்றுப்படியே யமுனைத் துறைவர் வெற்றி பெற்றதால் அரசி பெரிதும் மகிழ்ந்தாள். "என்னை ஆளவந்திரோ!" எனப் பாராட்டினுள். அன்று முதல் யமுனைத் துறைவருக்கு ஆளவந்தார் என்னும் பெயர் வழங்கலாயிற்று,

இவ்வற்புதங்களையெல்லாம் கேட்டு மகிழ்ந்த மணக்கால்நம்பி ஆளவந்தாரைக் காணப்புறப்பட்டார். ஆளவந்தாரின் வீடு கட்டுங்காவலுமாயிருந்ததால் உள்ளே செல்லமுடியாமல் வருந்தினர், எனவே உள்ளே செல்ல உபாயம் ஒன்றைத் தேடினர்.

தூதுளை எனப்படும் கீரையை ஆளவந்தார் விரும்பியுண்பார் என்பதை மணக்கால்நம்பி அறிந்து கொண்டார். எனவே நாள்தோறும் தூதுளையைப் பறித்து மடப்பள்ளிக்கு அனுப்பி வந்தார். ஆறு மாதமாக இவ்வாறு செய்தும் பலனில்லை. எனவே தூதுளையைக் கொடுப்பதை நிறுத்தி விட்டார். "தூதுளையில்லாமல் போனதேன்!" என்று சமையல்காரரை ஆளவந்தார் கேட்டார். வழக்கமாகக் கொண்டுவந்து கொடுக்கும் கிழவர் வரவில்லாமல் போனதே காரணம் என்றறிந்து, அக்கிழவர் வந்தால், தம்மிடம் அனுப்பிவைக்குமாறு கட்டளையிட்டார்.

மணக்கால் நம்பி மறுபடியும் ஆசை கொண்டு தூதுளையைக் கொண்டுவந்தார். இதையறிந்த ஆளவந்தார் மணக்கால்நம்பியை உள்ளே வரவழைத்தார். நம்பியின் தெய்வீகவொளியில் மனத்தைப் பறிகொடுத்தார். "நாளும் தூதுளை கொண்டு வந்து கொடுத்தது எந்த ஆசையின் பொருட்டு? உமக்கு என்னிடம் என்ன வேண்டும்?" எனக் கேட்டார்.

"நான் கொடுக்க வந்தேனேயன்றிக் கொள்ளவரவில்லை. உம் முன்னோர் தேடிவைத்த பொருள் இருக்கிறது. அதை நீர் கொள்ளுமளவும் நான் இங்கே தடையின்றி வந்து செல்ல வாய்ப்பளிக்க வேண்டும்!" என்று நம்பிகள் கூறினர். அதன் படி நாள்தோறும் தடையில்லாமல் வந்து கீதையின் பதினெட்டு அத்தியாயங்களையும் பொருள்விளங்க ஆளவந்தாருக்கு நம்பிகள் உபதேசித்தார். அன்றியும் தனிமையில் சில ரகஸ்யார்த்தங்களையும் உபதேசித்தார். பால் ஏறஏற நெல் தலைவணங்கி நிற்றல் போல, ஞான மிகுதியால் ஆளவந்தாரும் பரிபக்குவ நிலையை எய்தலானுர்.

இதுவே தக்க சமயமென்று நம்பிகள் ஆளவந்தாரை அழைத்துக் கொண்டு திருவரங்கம் சென்றுர். திருவரங்கப் பெருமானைக் காட்டி, "இதுவே உம் முன்னோர் தேடிவைத்த நிதி!" என்று கூறினுர். ஆளவந்தார் உள்ளம் பூரித்து 'காலத்தை வீணுல் கழித்து விட்டோமே!" என்று வருந்தித் திருவரங்கமே பதியாக வாழ்ந்து வந்தார். அங்கே இருபது பேர் இவர்க்குச் சீடராயினர். நாதமுனிகள் குருகைக் காவலப்பனுக்குரைத்த ரகஸ்யச் சிறப்பையும் குருகைக் காவலப்பனிடம் கேட்டுணருமாறு நம்பிகள் ஆளவந்தாருக்கு உரைத்தருளினுர். வைணவ ஆச்சார்யர் பலரை ஏற்படுத்தித் தர்சன நிர்வாகம் செய்யுமாறு கேட்டுக்கொண்ட மணக்கால் நம்பிகள் தம் ஆச்சார்யரான உய்யக் கொண்டாரைத் தியானித்தவாறே திருநாட்டுக்கெழுந்தருளினுர்.

கங்கை கொண்ட சோழபுரத்திலே யோக நித்திரையில் எழுந்தருளியிருந்த குருகைக் காவலப்பனிடம் ரகஸ்யோபதேசம் பெறச் சென்றுர். அப்பன் நாள் ஒன்றைக் குறித்து அன்று வருமாறு கூறினுர். பின்னர் அங்கிருந்தும் திருவனந்தபுரம் சென்று பெருமாளைச் சேவித்து வந்தார். சில நாள் கழித்துத் திருவரங்கம் திரும்பி வந்தார் "இனிமேல் நம்முடைய வைணவ நெறிக்கு வழிகாட்டியாக யார் அமைவுர்?" எனச் சிந்தித்தவாறே திருவரங்கத்தில் வாழ்ந்து வரலானுர்.

*



ஸ்ரீசைலம் கோயிலின் முன் தோற்றம். — எம். ராஜ்யலக்ஷ்மி.

நூல் மதிப்புரை:

# சுருக்கமாக காயத்ரி ஹோமம்

ஆசிரியர்: ஸ்ரீ ராமசாமா ஆசார்ய; நூல் கிடைக்குமிடம்: பைலட் பப்ளிகேஷன்ஸ், தபால் பெட்டி எண் 1545, 308, லிங்கி செட்டித் தெரு, சென்னை-600001; பக்கங்கள்: 20+ii; விலை: ரூ. 1-75.

(தன்னை) உச்சரிப்பவனை அல்லது ஜபிப்பவனைக் காப்பாற்றுவது என்னும் பொருளுடையது 'காயத்திரி'. குருவின் மூலமாக உபதேசம் பெற்றுக்கொண்டு செய்யப்படும் காயத்திரி ஜபம் ஸந்தியாவந்தனத்தின் ஒரு சிறப்புக் கூறு என்பதைக் குறிப்பாகப் பூணூல் அணிந்தவர் அறிவர். காயத்திரி மந்திரம் என்றவுடனேயே நமக்கு நினைவிற்கு வருவது சூரிய காயத்திரியான

'ஓம் பூர்புவஸ்ஸுவஹ
தத்ஸவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீ மஹி
தியோயோநஹ் ப்ரசோதயாத்'

என்பதுதான்.

'செங்கதிர்த்தேவன் சிறந்த
ஒளியினைத் தேர்கின்றோம்
அவன் எங்கள் அறிவினைத்
தூண்டி நடத்துக'

என்பது அதன் பொருள்.

எனினும், ஒவ்வொரு தேவதைக்கும் ஒரு காயத்திரி உள்ளது. எடுத்துக்காட்டாக, 'ஓம் தத்புருஷாய வித்மஹே, வக்ரதுண்டாய தீமஹி, தந்நோ தந்திஹ் ப்ரசோதயாத்' என்பது விநாயக காயத்திரி. 'ஓம் தத்புருஷாய வித்மஹே, மஹாஸேநாய தீ மஹி, தந்நோ ஷண்முகஹ் ப்ரசோதயாத்' என்பது சுப்பிரமணிய காயத்திரி. இங்ஙனமே, மும்மூர்த்திகளுக்கும முப்பெரும் தேவியர்க்கும் நவகிரஹ தேவதைகளுக்கும் வேறு பல வழிபடு மூர்த்திகளுக்கும் தனித்தனியாக காயத்திரி மந்திரங்கள் உள்ளன. அந்தந்தத் தேவதையினால் அடையக்கூடிய பயனைப் பெறுவதற்கு அததற்குரிய காயத்திரி மந்திரத்தை ஜபம் செய்து பயன் பெறலாம்.

ஜபம் செய்வதற்குப் பதிலாக, அக்னி வளர்த்து, மந்திரத்தை ஒவ்வொரு தடவையும் சொல்லி, அததற்குரிய பொருள்களை அதில் ஹோமம் செய்யும் முறையும் உள்ளது. ஒவ்வொரு தேவதைக்கும் அக்னியில் ஆஹுதி செய்ய வேண்டியதற்கான சிறப்புப் பொருள்கள் இருக்கின்றன. மேலும், ஹோமம் செய்வதற்கான பூஜை முறைகள், அக்னி ஸ்தாபனம், பதினாறுவகை உபசாரங்கள், பூர்ணாஹுதி, விஸர்ஜனம் போன்ற சடங்குகள் பற்றிய அறிவும் அவசியமாகிறது.

இவை அனைத்தும் சம்ஸ்கிருத மொழியிலேயே அமைந்துள்ளன. இவற்றைச் சுருக்கமாகத் தொகுத்து தமிழ் எழுத்தில் மிகுந்த முயற்சியுடன் தயாரிக்கப்பட்டிருக்கிறது இந்நூல்

சம்ஸ்கிருதச் சொற்களைத் தமிழ் எழுத்தில் பெயர்த்து எழுதும்போது நிரம்பக் கவனம் தேவை. அதிலும் மந்திரங்களைப் பெயர்த்து எழுதும் போது மிகுந்த விழிப்புடன் இருக்க வேண்டும். அப்போதுதான் அவற்றால் பயன் அடைய முடியும். உச்சரிப்புப் பிழை ஏற்படாது.

ஆனால், ஆர்வத்துடன் தயாரிக்கப்பட்டுள்ள இந்நூலில் எழுத்துப் பிழைகள் கிட்டத்தட்ட ஒவ்வொரு பக்கத்திலுமே மலிந்திருப்பது ஒரு பெரும் குறைபாடு. சந்திப் பிழைகளும் ஆங்காங்கே தென்படுகின்றன. நூல் உண்மையிலேயே பயனுள்ளதாய் அமைய வேண்டும் எனின் அடுத்த பதிப்பிலாவது இப்பிழைகள் திருத்தப்படல் வேண்டும்.

திரு. அ. நடராஜன் — திருப்பதி.

---

8-ம் பக்கத் தொடர்ச்சி)

நெறிச் செல்வர்களின் பாடல்கள் கோயில் சுவர்களில் மிளிரச் செய்தல் வேண்டும்.

இறையே இசை, இசையே இறை என்ற தத்துவத்தை உணர்ந்திடத் தக்க முறையில் அமைந்திடும் பக்திப் பாடற் பள்ளிகளே கோயில்கள் என உயிராகக் கொள்ளும் உறுதிப் பாடமைய வேண்டும்.

எந்த ஒரு சாதாரணப் பாடலையும் பாடும்போதே மனம் மகிழ்வுறும்போது பக்தி நிறைப் பாடல்கள் கூட்டாகப் பாடச் செய்யும் போது பால பருவம் முதலே பாடச் செய்ய நல்ல பழக்கத்திற்கு வழி வகுக்கும்

புள்ளினமும் விலங்கும் இசைக்கு இடமளிக்கும்போது வல்ல தமிழறிஞர் பண்களை இனிமையுடன் இசைத்திட இன்பம் கொள்ளாத மனம் இவ்வுலகினில் இருக்காதே!

பள்ளிப்படிப்பு முடிந்தவர் கூட திருப்பாவை, திருவெம்பாவைத் வித்தியாசம் தெரியாதிருக்கும் நிலை மாற வேண்டாமா? சித்தர்களின் பாடல்கள், ஆழ்வார்களின் பாசுரங்கள், நாயன்மார்களின் நல்ல தமிழ்ப் பாக்கள் ஆகியவற்றை நாளெல்லாம், நாடெல்லாம் நயமுடன் பாடிட கோதை கூறியதுபோல தீங்கின்றி மாதம் மும்மாரி பொழிய, கலை தொழில் பலவாக எங்கும் தமிழினை எதிரொலிக்க இறையும் இசையுமே வழி வகுக்கும்.

இறைக்குக் குறிப்பிட்ட வடிவமில்லாது போல இசைக்கும் கண்ணுக்கு காணும் உரு ஏதுமில்லை என்பதை உணர்ந்து இசைவழி இறையைக் கண்டிட்டால் வசையிலாப் புகழ் நம் திசை நோக்கி வரும். இது உறுதி.

*

வ



ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொது மக்களுக்கோர் அரிய நற்செய்தி

**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்த்ர சரஸ்வதி ஸ்வாமிகள்,** திருமுருக கிருபானந்த வாரியார் மற்றும் பல மஹான்களால் ஸ்ரீ முகமும் ஆசியும் பெற்று **நவசக்தி** நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்குரிய தெய்வீக சாதனங்கள்.

| எண் | யந்த்ரங்களின் பெயரும் அதன் பலனும் | விலை ரூ விபரம் |
|---|---|---|
| 1. | ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் $4\frac{1}{2} \times 4\frac{1}{2}$ cm. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது. | 350/= |
| 2. | ஸ்ரீ மஹா கணபதி 8 × 8 cm. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130/= |
| 3. | ஸ்ரீ மஹா லக்ஷிமி மஹா யந்த்ரம் 24 × 24 cm. 300 ஆண்டுகளுக்கு லக்ஷிமி கடாக்ஷத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் | 1100/= |
| 4. | ஸ்ரீ சக்கரம் 8 × 8 cm. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது. | 130/= |
| 5. | சர்வ ஜன மன, தனாகர்ஷணம், ஸ்ரீ சாம்ராஜ்ய லக்ஷிமி, ஸ்ரீ மஹா சுதர்ஸனம் 16 × 48 cm. மூன்று யந்த்ரங்கள் சேர்ந்து வியாபாரத்தில் விருத்தி அடையவும், லக்ஷிமி கடாக்ஷம் பணவரவுக்கும், எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபீட்க்ஷத்தை உண்டு பண்ணும். | 1650/= |
| 6. | சர்வ ஜன மன தனாகர்ஷணம், ஸ்ரீ சாம்ராஜ்ய லக்ஷிமி, ஸ்ரீ சுதர்ஸனம், 8 × 24 cm. மேற்கண்ட பலனைத் தரவல்லது. | 450/= |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரத்யங்கிரா, 16 × 48 cm. மூன்று யந்த்ரங்கள் சேர்ந்து வியாபாரத் தலத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும், பில்லி, சூன்யம், ஏவல்களை நீக்கி லக்ஷிமி கடாக்ஷம் தரவல்லது | 1650/= |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரத்யங்கிரா 8 × 24 cm. மேற்கண்ட பலன் தரவல்லது | 450/= |
| 9. | ரசமணி ஒன்றின் விலை அளவின் படி ரூ.250/= ரூ.350/= ரூ.500/= மனதை ஒரு நிலைப்படுத்தி சர்வ கார்ய சித்தி தரவல்லது. சுகபோக பாக்கியங்களை தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம் மறுபுறம் சுதர்ஸன டாலர் கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது | 65/= |
| 11. | ஸ்ரீசக்கரம் ஒருபுறம் மறுபுறம் ஸ்ரீ காமாக்ஷி டாலர் அம்பாள் கடாக்ஷத்தை ஏற்படுத்தி சிரமங்களை நீக்க வல்லது. | 65/= |
| 12. | ஸ்ரீ காமாக்ஷி ஒரு புறம், மறுபுறம் தனாகர்ஷண டாலர் அம்பாள் கடாக்ஷமும் பொருள் வரவும் தரவல்லது. | 65/= |
| 13. | ஸ்ரீ காமாக்ஷி மாங்கல்ய பாக்ய டாலர். அம்பாள் கடாக்ஷமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்க வல்லது. | 65/= |
| 14. | விவாகப் ப்ராப்தி டாலர் தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும். | 65/= |
| 15. | ஸ்ரீ சக்கரம் லக்ஷிமி பீஜம் டாலர் அம்பாள் கடாக்ஷத்தை நிலைத்திருக்க செய்யவல்லது | 65/= |
| 16. | கண் திருஷ்டி படம் வீட்டிலும் வியாபார தலத்திலும் வாகனங்களிலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகளை நீக்கி விபத்துக்களை தடுத்து காப்பாற்ற வல்லது. | 65/= |
| 17. | தத்தாத்ரேயர் யந்த்ரம் கண் திருஷ்டி பொறாமை துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி காப்பாற்ற வல்லது. 12 × 12 cm. | 150/= |
| 18. | இன்னும் பலவிதமான யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்த்ரங்களும் உள்ளன. டாலர்கள் அனைத்தும் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டது. | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும் கிராம தேவதைகளுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ.105/= வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0.50 பைசா தபால் தலையுடன் கீழ்கண்ட விலாசத்துக்கு விண்ணப்பிக்கவும். காஞ்சிப் பரமாச்சாரியாள் அனுக்கிரகத்துடன் புவனேஸ்வரி அம்பாளின் திரு உருவப்படம் 30 × 20 (இஞ்ச்) விலை ரூ.15/= விற்பனைக்கு வந்துள்ளது. வியாபாரிகளுக்கு தனிச் சலுகை உண்டு. ஓவியர் K.R.V. சர்மா தீட்டியது. மேற்கண்ட யந்த்ரங்களின் பலன்களை ஓரளவுதான் பத்திரிக்கையில் எழுத முடியும்.



## ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர் & தலைவர், நவசக்தி நிலையம்
153, லாயிட்ஸ் ரோடு (ஸ்டேட் பேங்க் எதிரில்)
கோபாலபுரம் - சென்னை 600 086
கடை போன் - 472013
மாமேரு டிரஸ்டு வீடு - 861254

"லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து"

# செய்திச் சுருக்கம்

பாண்டிச்சேரியில் உள்ள தி. தி. தேவஸ்தான திருமண மண்டபம் மற்றும் தகவல் தொடர்பு நிலையத்தின் உள்ளூர் ஆலோசனைக்குழு உறுப்பினர்களாக கீழ்வரும் நபர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

திருவாளர்கள் :

1) ஆர். எஸ். சாரி, ஐ.ஏ.எஸ். 2) கே. வி. சந்தானம் (3) இராமமூர்த்தி (4) உதவி ஆணையர், புதுவை அறநிலையத்துறை (5) பேராசிரியர் பி. ராஜாராம் (6) கே.நாராயணன் (7) டி. முருகேசன் (8) ராமகிருஷ்ண ரெட்டியார் (9) தலைவர், ஸ்ரீவேதபுரீஸ்வர் வரதராஜ பெருமாள் கோவில், புதுவை. தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் டாக்டர் தேவநாதன் அவர்கள் இவ் ஆலோசனைக்குழுவின் தலைவராக நியமிக்கப்பட்டுள்ளார்.

ஃ ஃ ஃ

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் தர்ம பிரசார பரிஷத் துறையின் சார்பில் பலஆண்டுகளாக பள்ளி மாணவர்களுக்கிடையே "இதிகாச கல்வித் தேர்வு" ஒன்றினை நடப்பித்து வெற்றி பெற்ற மாணவர்களுக்கு மேலாண்மைநற்சான்றிதழ்கள்வழங்கி வருகின்றது. இவ்வகையில் 7-2-88 அன்று ஆந்திர மாநில அளவில் நடத்திய மேற்படித் தேர்வில் சித்தூர் மாவட்டம் கம்மனப்பல்லி கிராமத்தைச் சார்ந்த குமாரி ஆர். உஷா தேவி (10-ஆம் வகுப்பு) கம்மம் மாவட்டம் எல்லநாடு எனும் ஊரைச் சேர்ந்த குமாரி அ. சவிதா (10-ஆம் வகுப்பு), பிரகாசம் மாவட்டம் மார்க்காபுரத்தைச் சார்ந்த திரு. எம். ரமேஷ் (8-ஆம் வகுப்பு) ஆகியோர் முறையே முதல் மூன்று இடங்களைப் பெற்றனர். 11028 மாணவ-மாணவிகள் பங்கேற்ற இத்தேர்வில் 317 பேர் முதல் வகுப்பிலும், 1461 பேர் இரண்டாம் வகுப்பிலும், 5432 பேர் மூன்றாம் வகுப்பிலும் தேர்ச்சிப் பெற்றனர்.

ஃ ஃ ஃ

உலக நன்மையின் பொருட்டு, தி. தி. தேவஸ்தானத்தாரின் திருச்சானூர் ஸ்ரீபத்மாவதித் தாயார் திருக்கோயிலில் 18-7-88 முதல் 7-8-88 வரை 'கோடிகுங்குமார்ச்சனை' நடைபெறும். ரூ. 5000/- செலுத்தி கிருஹஸ்தர்கள் இவ் 21 நாட்கள் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சியில் பங்கேற்கலாம். மேலும்ஒருநாள் நிகழ்ச்சியில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ரூ. 300/- செலுத்தலாம். 7-8-88 அன்று கோயிலில் ஸகஸ்ரகலஸாபிஷேகம் நடைபெறும். மேலும் அன்று தாயார் யானை வாகனத்தில் எழுந்தருளி, நான்கு மாடவீதிகளிலும் திருவீதி திருவலம் மேற்கொள்வார்.

ஃ ஃ ஃ

அண்மையில் தி. தி. தேவஸ்தானத்தாரின் தர்ம பிரசார பரிஷத் மற்றும் ஹைதராபாத் சின்மயா பாலாலயசங்கமும் இணைந்து திருப்பதி பால மந்திர் மாணவர்களுக்கென இந்து சமயக் கோடைப் பள்ளி ஒன்றினை 15 நாட்களுக்கு நடத்தின. இக்கோடைப் பள்ளியின் இறுதி நாள் பிரிவு வாழ்த்துரை விழாவினை சுவாமினி சாரதா பிரியானந்தா அவர்கள் துவக்கி வைத்தார். அவர்தம் சிறப்புரையில் மாணவர்களுக்கு சிறுவயதிலேயே சமயக்கல்வி புகட்டுவதன் அவசியத்தை எடுத்துரைத்தார். இந்நிகழ்ச்சியின் போது ஆந்திர மாநில அறநிலையத்துறை ஆணையர் திரு. ஜே. பாபு ரெட்டி, தி. தி. தே. பொறுப்பாண்மைக்குழு தலைவர் திரு. டி. சீதாராமய்யா, குழு உறுப்பினர் திரு. ஐ. எல். என். சாஸ்திரி, தர்மபிரசாரபரிஷத்சிறப்பு அலுவலர் திரு. மேடஸானி மோகன் மற்றும் பலரும் பங்கேற்று உரையாற்றினர். பயிற்சி பெற்ற மாணவர்களுக்கு நற்சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

ஃ ஃ ஃ

1-6-88 முதல் 7-6-88 வரை ஹைதராபாத்தில் தி. தி. தேவஸ்தானத்தாரின் தாஸஸாகித்ய திட்டத்துறையும், ஹைதராபாத் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமி பிருந்தாவன் சமிதியும் இணைந்து சமயக் கோடைப் பள்ளி ஒன்றினை நடத்தின. இப் பயிற்சிப் பள்ளியினை பெஜாவர் மடத்தைச் சார்ந்த விஸ்வேஷ தீர்த்த சுவாமிகள் துவக்கி வைத்தார். ஆந்திர மாநில கூடுதல் காவல் கண்காணிப்பாளர் திரு. வி. சீனுவாசராவ், ஐ.பி எஸ். அவர்கள் சிறப்பு விருந்தினராக இந்நிகழ்ச்சியில் பங்கேற்றார். இந்நாட்களின் போது காலை வேளைகளில் கன்னட தாஸர்களைப் பற்றிய உரைக்கோவைகளும், மாலை வேளைகளில் இசை, நாட்டிய நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

ஃ ஃ ஃ

திருப்பதியில் தி.தி. தேவஸ்தானத்தாரின் 2-வது, 3-வது தர்ம சத்திரங்களுக்கு எதிரில் உள்ள 1800சதுரஅடி பரப்புகொண்ட காலிமனையை, வட்டார சுற்றுலா மற்றும் தகவல் தொடர்பு அலுவலகக் கட்டிடத்திற்காக ஆந்திர அரசிற்கு வருடாந்திர குத்தகைக்கு விடுவதென்று தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில்......

காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் 2-6-88 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். திருமலை கல்யாணகட்டா அருகே சுவாமிகளை, தி. தி. தே. செய

பாட்சித் தலைவர், இணை செயலாட்சித் தலைவர் பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. ஐ. எல். என். சாஸ்திரி மற்றும் பல உயர் அலுவலர்கள் மேலாண்மை சார்பில் வரவேற்க பின்னர் கோயில் மரியாதைகள் சுவாமிகளுக்கு அளிக்கப்பட்டன.

ஃ ஃ ஃ

27-5-88 அன்று கர்நாடமாநில முதல்வர் திரு. ராமகிருஷ்ண ஹெக்டே அவர்கள் தம் துணைவியாருடனும், அரசியல் பிரமுகர் திரு. மதுதண்டவதே மற்றும் பல நம் திருமலைக்குவருகை புரிந்தனர்.

ஃ ஃ ஃ

இந்தியத் துணைக்குடியரசுத்தலைவர் டாக்டர். சங்கர் தயாள் சர்மா அவர்கள் தம் துணைவியாருடன் 7-6-88 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். திருமலையில் 3 நாட்கள் தங்கியிருந்து, கோவிலில் நடைபெற்ற ஸகஸ்ர கலஸாபிஷேகம், திருப்பாவாடை, அபிஷேகம் போன்ற பல சமயநிகழ்ச்சிகளில் பங்கேற்றார். ★

பெங்களூரைச் சார்ந்த கரட்டூரி சூர்யநாராயண எனும் தொழிலதிபர் தி. தி. தேவஸ்தானம் நடத்தி வரும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்திய அன்ன தான திட்டத்திற்கென ரூ. 10 இலட்சம் வழங்கினர். இத்தொகைக்கான வங்கி காசோலை ஒன்று தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்களிடம் வழங்கப்பட்டது இதுவரை இத்திட்டத்திற்கென ரூ 1 20 கோடி கொடையாக பெறப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் இரண்டு ஏக்கர் நிலப் பரப்பினை ஹைதராபாத் தொலைக் காட்சி நிலையத்தார் அதிக சக்தியுள்ள ஒளிபரப்பு நிலையம் ஒன்றினை நிறுவும் பொருட்டு 30 ஆண்டுகளுக்கு, ஏக்கர் ஒன்றிற்கு ஒரு வருட வாடகைத் தொகையாக ரூ. 1250/-க்கு மத்திய அரசுக்கு குத்தகைக்கு விடுவதென்று தி.தி. தேவஸ்தான மேலாண்மை முடிவு செய்துள்ளது.

16-7-88 அன்று திருமலைக்கோயிலில் சாலகட்ல ஆனிவார ஆஸ்தானம் நடைபெறும். இதனால் அன்று கோயிலில் கல்யாணோத்சவம், பிரம்மோத்சவம், வாகன சேவைகள், வசந்தோத்சவம் போன்ற ஆர்ஜித சேவைகள் நடைபெறமாட்டா மேலும் ஆனிவார ஆஸ்தானத்தை ஒட்டி, கோயிலில் கோயிலாழ்வார் திருமஞ்சனம் நடைபெற உள்ளதால், 12-7-88 அன்று ஆர்ஜித கல்யாணோத்சவம் (ரூ. 2000) நடைபெறாது. எனினும் பிரத்யேகார கல்யாணோத்சவம் (ரூ. 500/-) வாகன சேவைகள் ஆகியன அன்று நடைபெறும். அவற்றிற்கான கட்டணங்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.

# பவித்ரோத்சவம்

பவித்ரோத்சவம் என்றால் புனித விழா என்று பொருள்படும். கோயிலின் ஆன்மீகச் சூழ்நிலையை தொடர்ந்து நிலவச் செய்யும் பொருட்டு ஒவ்வொரு ஆண்டும் இவ்விழா கோயில் அரங்கினுள் மேற்கொள்ளப் படும். கி. பி 1464-ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டுக் குறிப்பு ஒன்றிலிருந்து இவ்விழாவைப் பற்றிய முதற் செய்தி காணப்படுகின்றது.

ஆவணிமாதம் சுக்ல தசமி நாள் இரவன்று நடத்தப்படும் அங்குராரப்பண நாள் தவிர்த்து இவ்விழா 5 நாட்கள் கொண்டாடப்பட்டது. 5-வது நாளான ஆவனி பௌர்ணமியை (சிராவண பௌர்ணமி) முதல் மூன்று குலத்தார் புனித நாளாகக் கொண்டாடினர். ஏகாதசி நாளன்று உற்சவ மூர்த்தி திருமாமணி மண்டபத்தை அலங்கரிப்பார். துவாதசி நாளன்று இறைவன் பவித்ரத்தால் (திரித்த புனித நூலால்) அலங்கரிக்கப்பட்டு தனது நாச்சிமார்களுடன் திருவீதி வலம் வருவார். 'விஷ்ணு பவித்ராரோணம்' என்று கூறப்படும் ஆவணி மாதம் சுக்லதுவாதசி நாளன்று இறைவன் யஞ்ஞோபவித்ரத்தால் அலங்கரிக்கப்படுவார். இவ்ஐந்து நாட்களின் போது ஒவ்வொரு நாளும் கோயில் அரங்கினுள் வேதங்கள் ஒருபுறம் ஓதப்பட, மறுபுறம் புராணச் சொற்பொழிவுகள் நடைபெற, வளர்க்கப்பட்ட ஹோமத் தீ எங்கும் காற்றினில் கலந்து சூழ்ந்திருக்க கோயிலின் சுற்றுப்புறச்சூழ்நிலை பக்தியின் எல்லையைத் தொடும்.

இவ்வாறு கொண்டாடப்பட்ட இவ்விழா கி.பி. 1562 வரை நடைபெற்று வந்ததாகத் தெரிகின்றது. பின்னர் எக்காரணத்தால், எப்பொழுது இவ்விழா தொடர்ந்து கொண்டாடப்படவில்லை என்பது திட்டவட்டமாக அறிந்துகொள்ளமுடியவில்லை. ஆனால் பல ஆண்டுகள் பிறகு அண்மையில் இவ்விழா மீண்டும் கொண்டாடப் பட்டு வருகின்றது. அவ்வகையில் இவ்வாண்டு 'பவித்ரோத்சவம்' 23-8-88 முதல் 25-8-88 வரை மூன்று நாட்கள் திருமலையில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படும் இதுபோது யாத்திரிகர்கள் திருமலைக்கு வருகை புரிந்து ஏழுமலையானின் தரிசனம் பெறுவது என்பது சிறந்ததாகக் கருதப்படும்.

★

# அது அத்தைத் தின்று அங்கே கிடக்கும்!

'செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் அது எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' என்ற வினாவை நம்மாழ்வாரிடம் எழுப்பினர் மதுரகவி.

'செத்தது' என்ற சொல் உடலைக் குறிக்கும். 'சிறியது' என்ற சொல் உயிரைக் குறிக்கும்.

மூலப் பகுதியின் விகாரமாக வளரவும் தேயவுமாகிய மாறுபாடு அடையக் கூடிய நிலையில் உள்ள உடலைச் 'செத்தது' என்று குறிப்படுகிறார். அறிவால் உடம்பு முழுவதும் வியாபித்தும், உடலில் நடைபெறும் நிகழ்ச்சிகளை அறியும் சக்தியினையுடையது உயிர். இருப்பினும் அந்த உயிரானது அணு வடிவினதாயிருப்பதால் அதனைச் 'சிறியது' என்று குறிப்பிட்டார்.

உடம்பில் பிறந்த உயிர் எதனைச் தின்று அதாவது எதனை அனுபவித்துக் கொண்டு எங்கே இருக்கும்? என்பது மதுரகவியின் வினா.

'அது அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்பது நம்மாழ்வார் விடை அதாவது உடம்பில் பிறந்த உயிர் தன் வினைப்பயனை அனுபவித்துக் கொண்டு அவ்வுடம்பிலேயே யிருக்கும் என்ற விடையினைப் பதினாறு ஆண்டுகள் பேசாத குழந்தை நம்மாழ்வார் மதுரகவி மூலம் வைணவ உலகத்திற்கு அளித்தார்.

வினைப்பயன்களை விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் ஏற்று, அறிவிலே தெளிவு பெற்று, ஆணவமற்ற நிலையில் தொண்டுள்ளத்தை வளர்த்திட வாழ வழி காட்டும் நெறி, நம்மாழ்வார் அளித்த விடையில் பொதிந்து கிடக்கிறது.

உடம்பில் பிறந்த உயிரின் நிலை—அறிவுடைய ஆன்மாவின் நிலையாகும். அறிவுடைய ஆன்மாவின் நிலை—ஒரு பத்தினிப் பெண்ணுடைய நிலையாகும். "பகவான் ஒருவனே புருஷனாவான். மற்ற ஜீவராசிகள் அத்தனையும் பெண்களே" என்று சாத்திரம் கூறும் (பேவ புருஷோத்தம—ஸ்த்ரீ ப்ராயம் இதரத்ஸர்வம்)

பத்தினிப் பெண் தன்னையுடைய கணவனுக்குப் பெருமை தந்து அவன் விருப்பப்படித்தன்னைப்பயன்படுத்திக் கொள்ளத் தகுதியுடைய நிலையிலிருப்பாள்.

அறிவுடைய ஆன்மா தன்னையுடைய இறைவனுக்குப் பெருமை தந்து அவன விருப்பப்படி தன்னைத் தொண்டு நெறியில் பயன்படுத்திக் கொள்ளத் தகுதியுடைய நிலையிலிருப்பான். இந்நிலைக்கு வடமொழியில் 'சேஷத்துவம்', என்பர்.

அணிகலன்களின் அழகு அவைகளை அணிபவனுக்குத்தான் ஆனந்தம் அளிக்கும், அணிகலன்களுக்கல்ல. பத்தினிப் பெண் அழகு, தன்னை அனுபவிக்கும் கணவனுக்கு இன்பமளிப்பதே யொழிய தனக்கல்ல. அது போல் அறிவுடைய ஆன்மாவின் தொண்டு தன்னையுடைய இறைவனுக்கு இன்பமளிப்பதே யொழிய தனக்கல்ல. இந்நிலையில் வளரும் மானுட உள்ளம் தொண்டு நெறியிலீடுபடும் பொழுது, எந்நிலையிலும் தளர்ச்சியடையாது. ஏன் தொண்டு நெறியிலீடுபட வேண்டும்? விளக்கம் காண்போம்.

மனிதன் தன்னுடைய உண்மையான இயல்பிலிருந்து கீழே இறங்கி வந்துள்ளான். மீண்டும் அவன் உண்மையான இயல்பினையடைய தன்னுடைய தொண்டின் மூலமே அகங்காரத்தை அகற்ற முடியும். நிலைத்த நெறியில் செயல்பட முடியும். தன்னுடைய சொரூபத்தை உணர முடியும். தன்னுடைய சொரூபத்தை அனுசந்தானம் செய்வதே பக்தி என்பார் ஸ்ரீ சங்கராச்சாரியார் (ஸ்வஸ்வரூபானு ஸந்தானம் பக்திரித்யபி தீயதே'). தொண்டனாக நடிக்க ஆரம்பித்த தொண்டரடிப் பொடியாழ்வார், தன் சொரூப நிலையை உணர்ந்தார்.

நடிப்பு நிச்சயமாக உயர்ந்த ஆன்மீகத் தொழில். உண்மையான ஆன்மீகவாதி தனது வாழ்க்கை முழுவதையும் நடிப்பாகவே மாற்றிவிடுகிறான். 'நான் அது அல்ல. அது எனது உண்மை நிலை அல்ல', என்பதை உணரும் ஒரு பார்வையாளனாகவும் இருக்கிறான். அந்த நடிகன் நடிப்பவன் என்பதிலிருந்து தனியாகத் தன்னைப் பிரித்துத் தனிமையில் இருக்கிறான். நாளடைவில் தன் சொரூப நிலையினை உணருகிறான்.

"ஒருவன் நம்பத் தக்க பாவத்தோடு என்னிடம் வந்தாலும் அவனை ஒருக்காலும் கைவிடேன்" (மித்ர பாவேன ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சன.') என் விபீஷணன் சரணடையும் பொழுது ஸ்ரீ ராமபிரான் கூறுகிறான். 'நடிப்பு' என்பது தன்னையும் அறியாமல் தன்னைத் தானே உணர்ந்து, திருத்த உதவும் உயர்ந்த ஆன்மீக நெறி என்பதை ஸ்ரீ ராமபிரானின் வாக்கு உணர்த்தப்படுகிறது.

ஸ்ரீவில்லிபுத்தூர் ஏ. ஸ்ரீராமலு தேசிகன்,
புதுச்செந்நெல்குளம்.

'நெஞ்சினுள்ளே எப்போதும் வசிக்கிறான் இறைவன். உன்னைச் சிந்திப்பதற்கு உறுப்பான அறிவு சிறிதும் இல்லாத கள்வனானேன். உனக்கு ஆட்பட்டவனாய் அடிமைக்கு வேண்டிய வேஷங்களையும் தரித்துக் கொண்டேன். சிந்திப்பவர்களின் சிந்தனைகளையெல்லாம் கூடவிருந்து அறிகின்றாயென்று முதலில் அடியேன் அறியவில்லை. (அதனால் போலி வேடம் அணிந்து பகதனாக, தொண்டனாக நடித்தேன்) பின அறிந்து கொண்டேன். எனக்குள்ளே வெட்கமடைந்தேன். அதனால் உன் எதிரில் நிற்க முடியாமல் உம்மை விட்டு விலகிச் செல்கிறேன். விலாப் பகுத்து எலும்பு ஒடியும்படி தன் நடிப்பை நினைத்துச் சிரித்தேன்' என்று தன்னுடைய நடிப்பின் மூலம் தனது நெஞ்சினுள் வசிக்கும் இறைவனை உணர்ந்த

தாகத் தமது அனுபவத்தினை வெளியிடுகிறார் தொண்டரடிப் பொடி ஆழ்வார்.

"உள்ளத்தே யுறையும் மாலை உள்ளுவார் உணர்வொன்றில்லா
கள்ளத்தேன் நானும்தொண்டாய்த் தொண்டுக்கே கோலம்பூண்டு
உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறிதியென்று
வெள்கிப்போய் யென்னுள்ளே நான் விலவறச் சிரித்திட்டேனே."

தொண்டனாக நடித்த தொண்டரடிப் பொடியாழ்வார், தம்முடைய உள்ளத்தில் குடிகொண்டுள்ள இறைவனை உணர்ந்தார். அது போல் தொண்டு நெறியில் ஈடுபடும் அறிவுடைய ஆன்மா, தன்னுடைய சொரூப நிலையினையும் இறைவனுடைய சொரூப நிலையினையும் உணர முடியும் என்பது தெளிவாகிறது. "உன்னது என்னது ஆவியும், என்னது உன்னது ஆவியும்—இன்ன வண்ணமே நின்றாய் என்று உரைக்க வல்லேனே?" என்கிறார் நம்மாழ்வார்.

"ஏ! அர்ஜுனா! கடந்த எக்காலத்திலும் நான் இல்லை என்பதில்லை. நீ இல்லை என்பதில்லை. இந்த ராஜாக்கள், பீஷ்மர் துரோணர் அனைவரும் இல்லை என்பதில்லை. நாம் அனைவரும் இருந்தே இருக்கிறோம். இப்பொழுதும் நாம் இருக்கிறோம் என்பது கண் கூடு. இனிமேல் வரும் காலங்களிலும் நாம் இருக்க மாட்டோம் என்பதில்லை. இருக்கவே போகிறோம்", என்கிறான் கீதாசார்யன் (2.12)

சொல்லும் விசயத்தில் உறுதியைக் காட்டுவதற்காகப் பகவான் 'இருந்தாய்' 'இருந்தேன்' என்று சொல்லாமல், 'இல்லை', 'என்பதில்லை', என்று சொல்கிறான். இந்த சுலோகத்தில் பகவான் அர்ஜுனனிடம், 'நான்', 'நீ', 'இந்த ராஜாக்கள்', என்று பிரித்துச் சொல்கிறான். இப்பொழுது இருப்பது போலவே என்றென்றும் நாம் நிரந்தரமாக இருப்போம் என்றும் சொல்கிறான். அறிவுடைய ஆன்மாக்களுள் பரஸ்பரம் வேற்றுமை இருப்பதாகச் சொல்கிறான். ஈஸ்வரன் வேறு, ஜீவான்மாக்கள் வேறு என்ற விசயமும் காட்டுகிறான். இதனால் இந்த வேற்றுமை எப்பொழுதும் மாறாதது என்ற விசிட்டாத்வைதிகளின் கொள்கையினை, இச்சுலோகத்தின் மூலம் தெளிவாகக் குறிப்பிடுகிறான் கீதாசார்யன்.

அறிவுடைய அறிவற்ற ஆன்மாக்களின் சொரூபம் நீடித்து நிற்கிறது. அதே நேரத்தில் ஈஸ்வரனுடைய சொரூபத்திற்கு வசப்பட்டும் இருக்கிறது. ஈஸ்வரனுடைய சங்கல்பத்திற்கு ஆன்மாக்களின் செயல் வசப்பட்டிருக்கிறது. ஆன்மாக்கள் ஈஸ்வரனுடைய பிரயோஜனத்தையே தமக்கு பிரயோஜனமாகக் கொண்டுள்ளன. இக்கருத்தினை நம்மாழ்வார், 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்', என்ற வாக்கியத்தில் 'கிடக்கும்' என்ற சொல்லில் குறிப்பிடுகிறார். "படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே", என்ற அடியில் குறிப்பிடுகிறார் குலசேகராழ்வார்.

ஜீவான்மா, பரமான்மா சொரூபம் ஆசார்யனருளால் மனத் தெளிவு ஏற்பட்ட நன்னாளில் உணர முடியும். உணரும் முனபு தாம செய்த கர்ம வினையால் வீணாகக் காலங்கழித்தமையைப் பற்றி மிகவும் வருத்தப்பட்டுக் கூறுகிறார் நம்மாழ்வார்.

"தெரிந்து உணர்வு ஒன்று இன்மையால் தீ வினையேன், வாளாயிருந்தொழிந்தேன் கீழ் நாட்களெல்லாம்" என்கிறார் இவ்வடியினை 'உணர்வு இன்மையால்' என்றும், 'உணர்வு ஒன்று இன்மையால்', என்றும், 'தெரிந்து உணர்வு ஒன்று இன்மையால்', என்றும் பிரித்துப் பொருள் காண்போம்.

உடல் வேறு; ஆன்மா வேறு. அறிவில்லாமையைக் கருதி 'உணர்வு இன்மையால்', என்றார்.

ஆன்மா இறைவனுக்கு அடிமைப்பட்ட பொருள் என்ற அறிவில்லாமையைக் கருதி, 'உணர்வு ஒன்று இன்மையால்', என்றார்.

'இறைவனுக்கு அடிமைப்பட்டது ஆன்மா', என்ற உணர்வு நிலைத்து உள்ளத்தில் வேரூன்ற வேண்டுமானால், அவனுடைய அடியார்களான பாகவதோத்தமர்களுக்கு அடிமைப்பட வேண்டும்.

பாகவதோத்தமர்களுக்கு அடிமை இந்த அறிவுடைய ஆன்மா என்ற அறிவில்லாமையைக் கருதி, 'தெரிந்து உணர்வு ஒன்று இன்மையால்', என்றார்.

அவரவர் செய்த கர்மாதான் பலனளிக்கிறது. ஆனால் கர்மா அழியக் கூடியதாகையால் அதுவே உறுதியாகப் பலனளிக்கிறதென்றும் கூற இயலாது. அவரவர் செய்த பாப புண்ணியங்களால் ஏற்பட்ட பகவந் நிக்ரஹ அனுக்ரஹங்களே முழுப் பலனை அளிக்கின்றன என்ற கருத்தினைத் தெளிவாக அனுபவித்துக் கொண்டு, அறிவுடைய அறிவற்ற ஆன்மாக்களுக்குத் தொண்டு செய்வோம். அவைகளில் ஊடுருவி வசிக்கும் இறைவனுடைய முக மலர்ச்சிக்காகத் தொண்டு செய்வோம். அத்தைத் தின்று (கர்ம வினைகளை அனுபவித்துக் கொண்டு) அங்கே கிடப்போம். (அந்தத் தொண்டு நெறியிலேயே காலங்கழிப்போம்.)

✠

## சந்தாதாரர்களுக்கு. . . .

31-8-88—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

75 216 219 221 222 226 227 228 230 332 351 356 358 359 360 364 367 382 753 765 768 773 775 779 780 1842 1846 1 48 1858 1859 1866 1868 1875 1878 3217 முதல் 3221 3223 முதல் 3232 3234 3235 3236 3238 முதல் 3243 3245 3246 3247 3249 முதல் 3266 3268 3270 முதல் 3276 3278 முதல் 3298 3300

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-51750.1

